॥ श्रीः ॥

शङ्करभगवत्पादविरचिता

# ॥ शिवानन्दलहरी ॥

Text in Sanskrit & Tamil, and Tamil Translation

By

S. V. PARAMESWARAN
Sahitya Siromani

e 6



M. N. RAMASWAMY IYER MEMORIAL EDITION

SRI RAM PUBLISHERS
22, Armenian Street,
MADRAS-1

1976

॥ श्रीः ॥

शङ्करभगवत्पादविरचिता

# ॥ शिवानन्दलहरी ॥

**Text in Sanskrit & Tamil, and Tamil Translation**

**By**

**S. V. PARAMESWARAN**
**Sahitya Siromani**

M. N. RAMASWAMY IYER MEMORIAL EDITION

1976

**SRI RAM PUBLISHERS**
**22, Armenian Street,**
**MADRAS-1**

॥ श्रीः ॥

श्रीशङ्करभगवत्पादविरचिता

# ॥ शिवानन्दलहरी ॥

कलाभ्यां चूडालंकृत-शशिकलाभ्यां निजतपः-
फलाभ्यां भक्तेषु प्रकटित-फलाभ्यां भवतु मे ।
शिवाभ्यामस्तोक-त्रिभुवन-शिवाभ्यां हृदि पुन-
र्भवाभ्यामानन्द-स्फुरदनुभवाभ्यां नतिरियम् ॥ १ ॥

॥ ஸ்ரீ: ॥

# சிவானந்தலஹரீ

கலாப்யாம் சூடாலங்க்ருத-சசிகலாப்யாம் நிஜதப:-
பலாப்யாம் பக்தேஷு ப்ரகடித-பலாப்யாம் பவது மே ।
சிவாப்யாமஸ்தோக த்ரிபுவன சிவாப்யாம் ஹ்ருதிபுனர்-
பவாப்யாமானந்த-ஸ்புரதனுபவாப்யாம் நதிரியம் ॥ 1 ॥

[பரமகருணாமூர்த்தி ஸ்ரீ ஆதி சங்கரபகவத்பாதர் அவர்கள் தான் ஜீவன்முக்தராக இருந்தும் பிற ஜனங்களும் இப்பிறவிக்கடலிலிருந்து மோக்ஷம் பெறவேண்டுமென விரும்பி ஸ்ரீ பரமேச்வரனை ஸ்துதிப்பதற்கு முன் இந்த ஸ்தோத்ரம் தடையின்றி முடிவடைய மங்கள ச்லோகமாக ஆதி தம்பதிகளான பார்வதி பரமேச்வரர்களை ஸ்துதிக்கின்றார்கள்.] மிகத்தெளிவாக ச்ருதிவாக்யங்களால் விளக்கப்பட்டு "ஈசான ஸர்வ வித்யானாம்" மென்று ஸர்வ வித்யைகளினுடைய வடிவமாய் விளங்குகின்றவர்களும் தம் தம் தலையில்

அலங்காரமாக சூடப்பட்ட மூன்றும் பிறை சந்திரனுடைய சோபையை தங்கள் கேச ஜாலங்களின் சோபையால் மேலும் சோபையையூட்டுகின்றவர்களும் ஒரு சமயம் பரம சிவன் பார்வதியை பார்யையாக அடைய விரும்பி ஆஹாராதிகளையொழித்து மிகக்கடினமாகத் தபஸ் புரிந்தார். அது போலவே பார்வதி தேவியும் பரமசிவனைப் பர்த்தாவாக அடைய விரும்பி பல கடின வ்ரதங்களை அனுஷ்டித்து, தவம் புரிந்து ஒருவருக்கொருவர் செய்த தபஸின் பலனாக தம்பதிகளாக ஆனவர்களும், பார்வதீ பரமேச்வரர்களை பக்தி செய்கின்ற பக்தர்களுக்கு அருள்பாலித்து தங்கள் மஹிமைகளை பக்தர்களின் மூலமாகவே வெளிப்படுத்துகின்றவர்களும் மூன்று லோகத்து ஜீவராசிகளுக்கும் அவரவர்களுடைய கர்மபலனை யொத்து அநேகவிதமான நன்மைகளை செய்கின்றவர்களும் ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி என்று வேதங்களில் கூறியபடி பக்தர்கள் எப்பொழுதெல்லாம் த்யானம் செய்கிறார்களோ அப்பொழுதெல்லாம் புதிது புதிதாகத் தோன்றுகின்றவர்களாயும் சிவானந்த வெள்ளத்தில் தூய்த்து ப்ரகாசிக்கின்ற ஞானமே வடிவாய் அமர்ந்தவர்களுமான அந்த பார்வதீ பரமேச்வர்களுக்கு பூர்ண பக்தியுடன் கூடின எனது இந்த நமஸ்காரம் இருக்கட்டும்.

गलन्ती शम्भो त्वच्चरित-सरितः किल्बिषरजो
दलन्ती धीकुल्यासरणिषु पतन्ती विजयताम् ।
दिशन्ती संसारभ्रमणपरितापोपशमनं
वसन्ती मच्चेतो ह्रदभुवि शिवानन्दलहरी ॥ २ ॥

கலந்தீ சம்போ த்வச்சரிதஸரித: கில்பிஷரஜோ
தலந்தீ தீகுல்யா-ஸரணிஷு பதந்தீ விஜயதாம்।
திசந்தீ ஸம்ஸார-ப்ரமண-பரிதாபபோபசமனம்
வஸந்தீ மச்சேதோ ஹ்ரதபுவி சிவானந்தலஹரீ ॥ 2 ॥

ஸர்வ சுகங்களுக்கும் மூலகாரணமான ஹே பரமேச்வரா! எல்லையில்லாத கல்யாண குணங்கள் அனைத்தும் அடங்கிய உன் சரிதத்தை ச்ரவணம் செய்து ச்ரவணம் செய்து நிர்மலமான வெள்ள ப்ரவாகமாயும் அதுமாறி பெரு நதியாக ஆகி என் போன்றவர்கள் அறிந்தோ அறியாமலோ செய்த அநேக வித பாபமாகிய தூளியை, ஓர் நதியானது பாய்ந்து ப்ரவஹிக்கும் தறுவாயில் அது பாய்கின்ற இடத்தில் இருக்கும் மலங்களை எல்லாம் எவ்விதம் சுத்தமாக விலக்குகிறதோ அதுபோல, என் பாபங்களனைத்தையும் விலக்கி பாபமற்றவனாக செய்து, புத்தி என்ற வாய்க்கால் வழியாக சென்று இந்த ஸம்ஸாரத்தில் பிறந்து வாழ்ந்து மடிந்து துன்பங்கள் பல அனுபவிக்கும் தாபத்தை சமனம் செய்கின்ற மிக மஹிமை வாய்ந்த உன் சரித்ர ச்ரவணத்தால் உணரப்படுகின்ற அந்த சிவானந்த வெள்ளம் என் மனம் என்ற ஏரியில் நிலையாகத் தேங்கி நின்று மிக மேன்மையுடன் வெற்றியோடு திகழட்டும்.

**त्रयीवेद्यं हृद्यं त्रिपुरहरमाद्यं त्रिनयनं**
**जटाभारोदारं चलदुरगहारं मृगधरम् ।**
**महादेवं देवं मयि सदयभावं पशुपतिं**
**चिदालम्बं साम्बं शिवमतिविडम्बं हृदि भजे ॥ ३ ॥**

**த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் த்ரிபுரஹரமாத்யம் த்ரிநயனம்**
**ஜடாபாரோதாரம் சலதுரகஹாரம் ம்ருகதரம்।**
**மஹாதேவம் தேவம் மயி ஸதய பாவம் பசுபதிம்**
**சிதாலம்பம் ஸாம்பம் சிவமதிவிடம்பம் ஹ்ருதி பஜே ॥ 3 ॥**

ருக் வேதம், யஜுர்வேதம், ஸாம வேதம் இவைகளின் முடிவாக அறிவாகாரமாய் அறியப்படுகின்றவரும் பரமேச்வரனையே சதாகாலமும் நினைத்து நினைத்து பஜித்து உருகு

கின்ற பக்தர்களின் சுத்தமான மனதில் எப்பொழுதும் ப்ரகாசிக்கின்றவரும் முப்புரங்களை தன் புன்னகையால் எரித்தவரும் அதாவது தங்கம், வெள்ளி, செம்பு முதலிய பலம் வாய்ந்த உலோகங்களைக்கொண்டு ஆக்கப்பட்ட புரங்களை விட பலம் வாய்ந்த, யாராலும் அழிக்க முடியாத உபநிடதங்களில் விவரித்து கூறப்பட்ட இந்த பவஸாகரத்தில் தன்னுடைய அடியவர்கள் அல்லல் படுவதற்கு காரணமாக இருக்கின்ற, ஸ்தூலசரீரம் ஸூக்ஷ்மசரீரம், காரண சரீரம் என்று சொல்லப்படுகின்ற முப்புரங்களை தன்னுடைய ஓர் சிறு நகையால் அழித்து தன் பக்தனை காப்பவரும். நித்யமான அழிவற்ற உருவமாக ச்ருஷ்டிக்கு முன்பே இருக்கின்றவரும், ஸகல லோகங்களுக்கும் ப்ரகாசத்தைத் தருகின்றவர்களான ஸூரியன், சந்திரன். அக்னி இவர்களை தன்னுடைய மூன்று கண்களாகக் கொண்டு நீண்ட மிக அழகு வாய்ந்த ஜடைமுடியோடு, அசைந்தாடுகின்ற கொடிய ஸர்ப்பத்தை மாலையாக அணிந்து சதா துள்ளி குதித்து அலைபாய்கின்ற மனித மனதையொத்த அழகிய மானையும் நெருப்பையும் தன்னிருகரங்களில் தாங்கி கொண்டு, எப்பொழுதும் எல்லா காலங்களிலும் எல்லா தேசங்களிலும் ப்ரகாசித்து கொண்டு, தானே ஆனந்த கனமாக இருந்து கொண்டு பிறரும் சிவானந்தத்தை அனுபவிக்க அருள் புரிந்து உலகில் பிறந்து மடிகின்ற மக்களின் பந்த பாசங்களை வேரோடு அறுத்து அவர்களை காக்கின்ற பசுபதியாக ஆகி மிகக்கருணையோடு என்னிடத்தில் அனுதியாக குடிபுகுந்திருக்கும் அவித்யையை அழித்து, மெய்ஜ்ஞானம் அளித்து ஆத்ம ஸ்வரூபத்தை அறியச் செய்கின்ற ஜ்ஞான ஸ்வருபியான உன்னை என்னிதயத்தில் வைத்து ஸதாஸர்வகாலமும் த்யானம் செய்கிறேன்.

सहस्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदा

न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम् ।

हरिब्रह्मादीनामपि निकटभाजामसुलभं
चिरं याचे शम्भो शिव तव पदाम्भोजभजनम् ॥ ४ ॥

ஸஹஸ்ரம் வர்த்தந்தே ஜகதி விபுதா க்ஷுத்ர-பலதா
ந மன்யே ஸ்வப்னே வா ததனுஸரணம் தத்க்ருதபலம் |
ஹரிப்ரஹ்மாதீனாமபி நிகடபாஜாமஸுலபம்
சிரம் யாசே சம்போ சிவ தவ பதாம்போஜபஜனம் || 4 ||

இவ்வுலகத்தில் வாழ்கின்ற மக்களுக்கு எளிதில் புலப்பட்டு அற்ப பயனை அளிக்கின்ற எண்ணற்ற தெய்வங்கள் இருக்கின்றனர். அவர்கள் தரும் பயனையோ அவர்களையோ நான் என் மெய்யுணர்வற்ற கனவு நிலையிலும் கூட நினைக்க விரும்பவில்லை. ஹரி, ப்ரஹ்மா முதலிய தைவங்களும் கூட உன் பாதஸேவையே பெரிது என எண்ணி உன் ஸமீபத்திலேயே இருந்து கொண்டு உன் ஸேவை செய்தும் எளிதில் அடைய முடியாத நிலையில் இருக்கும் உன்னையேதான் நான் பெரிதாகக்கருதி உன் பாத ஸேவையே எனக்குக்கதி எனத் திடமாக எண்ணி உன் பாதாரவிந்த பஜனமொன்றையே நீண்டகாலம் வரை தந்தருள்புரிய வேணுமாய் யாசிக்கிறேன்.

स्मृतौ शास्त्रे वैद्ये शकुन-कविता-गान-फणितौ
पुराणे मन्त्रे वा स्तुति-नटन-हास्येष्वचतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयि कोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथित कृपया पालय विभो ॥ ५ ॥

ஸ்ம்ருதௌ சாஸ்த்ரே வைத்யே சகுன-கவிதாகான-பணிதௌ
புராணே மந்த்ரே வா ஸ்துதி-நடன ஹாஸ்யேஷ்வசதுர: |
கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர்-பவதி மயி கோऽஹம் பசுபதே
பசும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதித க்ருபயா பாலய விபோ || 5 ||

அஜ்ஞானத்தின் பிடியில் அகப்பட்டுத் தவிக்கின்ற மக்களைக்காப்பதையே தொழிலாக கொண்ட ஹே பசுபதே! தர்மங்களுக்கெல்லாம் மூலமான வேதங்களில் சொல்லப் பட்ட தர்மங்களை விவரித்துக் கூறுகின்ற மனுஸ்ம்ருதி, யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி முதலிய புகழ் வாய்ந்த தர்ம சாஸ்த்ரங்களை நான் படிக்கவில்லை. இப்ரபஞ்சத்திற்கு அடிப்படையான கார்ய காரணங்களை யுக்தியின் மூலம் புத்தியைக் கூர்மையாக்கி அனுமானாதிகளால் அறிவிக்க கூடிய தர்க்க சாஸ்த்ரத்தை நான் படிக்கவில்லை. வார்த்தை களால் வர்ணித்து அளவிடமுடியாத உன்னை அறிய உதவுகின்ற வியாகரண சாஸ்திரத்தையும் நான் கற்க வில்லை. இந்த பூத உடல் அடிக்கடி நோய்வாய்ப்படு வதைத் தடுத்து தர்மத்தின் பொருட்டு அதை காப்பாற்ற உதவுகின்ற வைத்ய சாஸ்திரத்தை நான் அறியேன். ப்ரயாண காலங்களில் காகம் முதலிய பறவைகளாலும் குள்ளநரி முதலிய மிருகங்களாலும் நல்லது கெட்டதுகளை அறிந்து செயல்பட உதவுகின்ற சகுன சாஸ்திரத்தையும் நான் கற்கவில்லை. அழகான, இனிமையான, எளிதான சொற்றொடர்களை வைத்திழைத்த பாக்களை இயற்றும் ஆற்றலோ அல்லது உரை நடையாகவோ இயற்றும் ஆற்ற லையோ நான் அடையவில்லை. இனிமையான குரலில் உருக்க மான பாட்டுக்களைப் பாடும் இசைக்கலையையும் நான் பயில வில்லை. சைவபுராணங்களையும் வைஷ்ணவ புராணங்களை யும் நான் அறியேன்; மந்த்ர சாஸ்த்ரத்திலும் எனக்கு எது வும் தெரியாது. ஸ்தோத்ர பாராயணம், நடனம் ஆடும் கலை சிரிக்க சிரிக்க பேசி பிறரை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த் தும் கலைகளிலும் நான் ஸமர்த்தன் இல்லை. எந்த அறிவுமே இல்லாத மூடனை என்னிடம் ராஜாக்களுக்கோ அல்லது தனவந்தர்களுக்கோ ப்ரியமானது எப்படி உண்டாகும். ஒரு வேளை இக்கலைகளால் அவர்களின் ப்ரீதி எனக்கு கிடைக்கு மானல் எனக்கு அதில் விருப்பமில்லையே. ஹே பசுபதே! எல்லாம்வல்ல இறைவா! வேதங்களால் அறிவிக்கப்படு

கின்ற ஹே பரம்பொருளே! எங்கும் நிறைந்து விளங்குப வரே! பசுப்ராயமான என்னை க்ருபை கூர்ந்து கருணையுடன் காப்பாற்று.

घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्नि-रचलः
पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम् ।
वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदाम्भोजं शम्भोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥

கடோ வா ம்ருத்-பிண்டோப்யணுரபி ச தூமோடக்னிரசல:
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரசமனம்।
வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்க்க வசஸா,
பதாம்போஜம் சம்போர்பஜ பரமஸௌக்யம் வ்ரஜ ஸுதீ: ||

அநாதி காலமான பழக்க வழக்கங்களால் ஸாமான்ய சாஸ்திரங்களில் ஈடுபடுகின்ற ஹே மங்களகரமான புத்தியே, தர்கசாஸ்திரத்தில் அடிக்கடி கையாளப்படுகின்ற குடம், மண்ணுருண்டை, பரமாணு, நெருப்பு, மலை, துணி, நூல் இச்சொற்களால் உயிரை பறித்தெடுக்கின்ற அந்த கொடிய யமனின் வருகையைத்தடுக்க முடியுமா? முடியவே முடியாது. அப்படி இருக்கும்போது தர்க்க சாஸ்திர ப்ரஸித்தமான இந்த வீணான சொற்களால் என்ன பயன்? அனுமானம் செய்ய உதவுகின்ற மொழிகளை கத்திக்கத்தி தொண்டை வரண்டுதான் போகும். இந்த வரக்ஷியை ஏன் நீ அடைகிறாய். அழியாத ஸர்வ மங்களரூபியான அந்த பரமேச்வரனின் தாமரை மலரடிகளை அடிக்கடி நினைத்துபஜனம் செய். மிக எளிதில் நீ பரமானந்த சுகத்தை அடை.

मनस्ते पादाब्जे निवसतु वचः स्तोत्र-फणितौ
करौ चाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णन-विधौ ।

तव ध्याने बुद्धिर्नयन-युगलं मूर्ति-विभवे
परग्रन्थान् कैर्वा परमशिव जाने परमतः ॥ ७ ॥

மனஸ்தே பாதாப்ஜே நிவஸது வச ஸ்தோத்ரபணிதௌ
கரௌ சாப்யர்ச்சாயாம் ச்ருதிரபி கதாகர்ணனவிதௌ |
தவ த்யானே புத்திர்-நயனயுகளம் மூர்த்தி-விபவே
பரக்ரந்தான் கைர்வா பரமசிவ ஜானே பரமத: || 7 ||

ஹே பரமேச்வர ! தாமரை போன்ற உன் திவ்ய பாதங்களில் எனது மனம் அசையாமல் நிலை பெற்றிருக்க அருள் புரி. எனது நாக்கு உன் திவ்ய சரித்ரங்கள் அடங்கிய ஸ்தோத்ரங்களை பாராயணம் செய்வதிலும் உன் நாமாவை ஜபிப்பதிலும் ஈடுபடட்டும். எனது இரு கரங்களும் உனது தொண்டு செய்து உன்னை பூஜிப்பதிலும், எனது இரு செவிப்புலன்களும் அம்ருதமயமான உனது குணங்களை கேட்டுக் கேட்டு பரவசமடைவதிலும், இடைவிடாமல் ஏகாக்ரமாக உன்னை த்யானிப்பதில் எனது புத்தியும், உனது திவ்ய மங்கள மூர்த்தியை கண்குளிர கண்டு களிப்பதில் எனது இரு கண்களும் இருக்கட்டும். இவ்வாறு எனது எல்லா இந்த்ரியங்களும் உனது சேவையை செய்வதிலேயே ஈடுபடும்படி அருள் புரி. அப்படி உன் சேவையில் ஈடுபட்டுவிட்ட பிறகு மற்ற விஷயங்களை சொல்கின்ற புத்தகங்களை எந்த புலன்களின் உதவி கொண்டு தான் நான் அறிவது ?

यथा बुद्धिः शुक्तौ रजतमिति काचाश्मनि मणि-
र्जले पैष्टे क्षीरं भवति मृगतृष्णासु सलिलम् ।
तथा देवभ्रान्त्या भजति भवदन्यं जडजनो
महादेवेशं त्वां मनसि च न मत्वा पशुपते ॥ ८ ॥

**யதா புத்தி: சுக்தௌ ரஜதமிதி காசாச்மனி மணிர்-**
**ஜலே பைஷ்டே க்ஷீரம் பவதி ம்ருகத்ருஷ்ணாஸு ஸலிலம் |**
**ததா தேவப்ராந்த்யா பஜதி பவதன்யம் ஜடஜனோ**
**மஹா-தேவேசம் த்வாம் மனஸி ச ந மத்வா பசுபதே || 8 ||**

எங்கும் நிறைந்து விளங்கும் ஸ்வயம் ப்ரகாச ரூபியான ஹே மஹாதேவ! ஹே பசுபதே! தான் யாரென்று உணராத இம் மூட ஜனங்கள் லோகங்களை எல்லாம் தன்னகத்தே கொண்டு பரிபாலிக்கின்ற மஹிமை வாய்ந்த வேத வேத்யனான உன்னை அறிந்து கொண்டு இதயத்தில் த்யானிப்பதை விட்டு மற்ற தேவதைகளை ஸர்வ வல்லமை பெற்றவர்கள் என்று ப்ரமித்து அவர்களை வழிபடுகிறார்கள். இது அறியாமையின் காரணமல்லவா. கிளிஞ்சல் கீழே கிடப்பதை எட்டிநின்று பார்த்து அதில் தெரிகின்றதும் பளபளக்கின்றதுமான வெண்மையைப் பார்த்து வெள்ளி என்று மூடர்கள் நினைக்கிறார்கள். அவ்விதம் ஒரு விதமான கல்லை பார்த்து மாணிக்கம் என்றும் மாவு கலந்த ஜலத்தை பால் என்றும் பாலைவனத்தில் தெரிகின்ற கானல் நீரை நீர்க் குட்டை என்றும் எண்ணுகிறார்கள். இது அந்த மூடர்களின் அறியாமையே. இது போலவே மற்ற தேவதைகளைப் பார்த்து ப்ரமித்து அவர்களையே பஜிக்கிறார்கள்; உன்னை வழிபடாமலும் இருக்கின்றார்கள்.

**गभीरे कासारे विशति विजने घोरविपिने**
**विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।**
**समर्प्यैकं चेतस्सरसिजमुमानाथ भवते**
**सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥**

**கபீரே காஸாரே விசதி விஜனே கோரவிபினே**
**விசாலே சைலே ச ப்ரமதி குஸுமார்த்தம் ஜடமதி:**

ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜமுமாநாத பவதே
ஸுகேனாவஸ்தாதும் ஜன இஹ ந ஜானாதி கிமஹோ ||

எவ்விதமாவது உனது ப்ரஸாதத்தை அடைய விரும்பி அதற்குச் சுலபமான வழி யாது என் அறியாமல் உன் பாதார விந்தங்களை பூஜிப்பதற்காகப் புஷ்பத்தைத் தேடித்தேடி மூடன் மிக ஆழமான குளத்திற்கு செல்கிறான். அது போலவே கொடூர மிருகங்கள் நிறைந்த பயங்கரமான காட்டில் புஷ்பத்தைத்தேடி அலைகிறான். மிக விசாலமாக உயர்ந்தும், பரந்தும், நீண்டும் கிடக்கின்ற மலைச்சாரல்களி லும் சுற்றி சுற்றி வருகிறான். இது அவசியமேயில்லை. ஏனெனில் பயன் மிககுறைவு, சிரமம் அதிகம், பராசக்தி ஸஹிதம் உபாஸிக்கப்படவேண்டிய ஹே பார்வதிபதே! மனம் என்ற தாமரை மலர் இங்கேயே இருக்கிறது. இந்த மலரை உனக்கு அர்ப்பணம் செய்வதில் ச்ரமமேயில்லை. இந்த மலரைத்தேடி எங்கும் அலைய வேண்டியதில்லை, மன மாகிற புஷ்பத்தை உனக்கு சமர்ப்பித்து ஒரே இடத்தில் நிலைபெற்று ஆடாமல் அசையாமல் சுகமாக இருக்கலாம். அதிக பயனை அளிக்க கூடிய மலரும் இதுவே. இதை மூடர்கள் அறியாதது ஆச்சரியமன்றோ!

नरत्वं देवत्वं नग–वन–मृगत्वं मशकता
पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि-जननम्।
सदा त्वत्पादाब्ज-स्मरण–परमानन्द–लहरी-
विहारासक्तं चेद्धृदयमिह किं तेन वपुषा ॥ १० ॥

நரத்வம் தேவத்வம் நக–வன–ம்ருகத்வம் மசகதா
பசுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி–ஜனனம் ।
ஸதா த்வத்பாதாப்ஜ–ஸ்மரண–பரமானந்தலஹரீ–
விஹாராஸக்தஞ் சேத்ருதயமிஹ கிம் தேன வபுஷா ||

ஹே பரமேச்வரா! அவரவர்கள் செய்த ப்ராரப்த கர்மாவையனுஸரித்து உலகில் ஆத்மாக்கள் பிறவியை எடுக்கின்றன. மனிதனாக, தேவனாக, பறவையாக, அடர்ந்த காடு, மலை இவைகளில் வாழ்கின்ற வனவிலங்குகளாக, ஸாதுவான பசு வகைகளாக, புழு பூச்சிகளாக இப்படி படைப்பில் பலவகையான பிறப்பெடுத்தாலும் அல்லது உடலளவில் மனிதனாகவும் குணத்தளவில் மிருகத்தின் தன்மையோ, பறவை, கொசு, விலங்கு, புழு, பூச்சி முதலிய ப்ராணிகளின் குணங்களையோ கொண்டிருந்தாலும் மேற்படி பிறவிகளையோ, மேற்படி குணங்களுடன் கூடின மனிதப் பிறவியோ ஆனாலும் எப்பொழுதும் எனது மனம் உன் திவ்ய பாதாரவிந்தங்களை ஸ்மரிப்பதில் அக்கறையுடன் ஈடுபட்டு அதனால் அனுபவிககப்படுகின்ற சிவானந்த பேரின்ப வெள்ள ப்ரவாஹத்தில் மூழ்கி விட்டால் பிறப்பு எப்பிறப்பாயினும் குணம் எதுவாயினும் ஒரு குறைவுமில்லை. உன்னை ஸ்மரிப்பது தான் முக்கியமே தவிர பிறப்போ குணமோ அல்ல.

वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो
नरो वा यः कश्चिद्भवतु भव किं तेन भवति ।
यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते
तदीयस्त्वं शंभो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥

வடுர்வா கேஹீ வா யதிரபி ஜடீ வா ததிதரோ
நரோ வா ய: கச்சித் பவது பவ கிம் தேந பவதி |
யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீனம் பசுபதே
ததீயஸ்த்வம் சம்போ பவஸி பவபாரஞ்ச வஹஸி || 11 ||

ஹே சம்போ! உயர்ந்த பிறவி தாழ்ந்த பிறவி என்பது முக்யமல்ல. உன்னை இதயத்தே வைத்து த்யானம் செய்யாத ஓர் ப்ரஹ்மசாரியோ, க்ருஹஸ்தனோ அல்லது

இவ்விரு ஆச்ரம தர்மங்களை யதோக்தமாக அனுஷ்டித்து மூன்ருவதான வான ப்ரஸ்த ஆச்ரமியோ, அல்லது அதை யும் தாண்டி எல்லாவற்றையும் துறந்த ஸன்யாஸியோ அல்லது வேறு யாராகவோ இருக்கட்டும். ஹே பசுபதே! அதனல் என்ன தான் நடக்கப் போகிறது. ஒன்றும் நடக்கப் போவதில்லை. தாமரை போன்ற எவருடைய ஹ்ருதயம் சதா உன்னையே நினைத்து நினைத்து நிலை பெற்றிருக்கிறதோ நீ அவராகவே ஆகிவிடுகிருய். ஹே பரமேச்வர! அவருடைய ஸம்ஸார பாரத்தையும் நீயே தாங்கி அவரை இன்புற செய்கின்ருய்.

गुहायां गेहे वा बहिरपि वने वाऽद्रिशिखरे
जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।
सदा यस्यैवान्तःकरणमपि शंभो तव पदे
स्थितं चेद्योगोऽसौ स च परमयोगी स च सुखी ॥

குஹாயாம் கேஹே வா பஹிரபி வனே வா/த்ரிசிகரே
ஜலே வா வஹ்நௌ வா வஸது வஸதே: கிம் வத பலம் |
ஸதா யஸ்யைவாந்தகரணமபி சம்போ தவ பதே
ஸ்திதஞ்சேத் யோகோ/ஸௌ ஸ ச பரமயோகீ ஸ ச ஸுகீ ||

குஹையிலோ, வீட்டிலோ, வெளி ப்ரதேசங்களிலோ, வனங்களிலோ, உயர்ந்த மலையின் உச்சியிலோ, ஜலத்திலோ, அல்லது கடுமையான வெய்யிலில் நான்கு பக்கங்களிலும் நெருப்பை வளர்த்து அதன் மத்தியில் இருந்து கொண்டு உன்னை பஜிப்பதினலோ என்ன ப்ரயோஜனம். ஹே சம்போ! சொல். எவனுடைய உள்ளமும் உள்ளடங்கிக்கிடக்கின்ற புலன்களும் உன் திருவடித் தாமரையில் எப்பொழுதும் நிலைபெற்றிருக்குமேயானல் அதுவே மிக சிறந்த யோகமாகும். அப்படிப்பட்ட உள்ளம் உடைய

வனே மிக சிறந்த யோகி எனப்படுகிறுன். அவனே சலன மற்ற "நான் பரமானந்த சுகத்தை அனுபவிக்கின்றேன் என்ற உணர்வும் கூட அகன்ற நிலே" என்ற நிர்விகல்பக ஸமாதி யடைந்தவஞக ஆகிறுன். அவனே பேரின்பத்தை அனுபவிக்கின்ற சுக புருஷன்.

असारे संसारे निजभजनदूरे जडधिया
भ्रमन्तं मामन्धं परमकृपया पातुमुचितम् ।
मदन्यः को दीनस्तव कृपण-रक्षाति-निपुण-
स्त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥

**அஸாரே ஸம்ஸாரே நிஜபஜன—தூரே ஜடதியா**
**ப்ரமந்தம் மாமந்தம் பரமக்ருபயா பாதுமுசிதம் |**
**மதன்ய: கோ தீனஸ்தவ க்ருபண—ரக்ஷாதிநிபுணஸ்-**
**த்வதன்ய: கோ வா மே த்ரிஜகதி சரண்ய: பசுபதே ||**

அஞ்ஞானத்தில் மூழ்கி கிடக்கின்றவர்களுக்கு ஞானத்தை யூட்டி காப்பாற்றுகின்றவரே! ஸர்வச்ரேஷ்ட! பரமேச்வரஞன உன்னே பஜிப்பதற்கு எட்டாத தூரத்தில் இருக்கின்ற இந்த நிஸ்ஸாரமான ஸம்ஸாரத்தில் ஏதோ ஓர் இன்பம் இருப்பதாக ஏமாந்து ஓடி அலேகின்றவனும் இது நித்யம், இது அநித்யமென்று பிரித்து அறிந்து கொள்ளாத குருடனுமான என்னே கருணேயோடு நீ காப்பதுதான் ந்யாயம். என் ஆன்மாவை நான் அறியும்படி செய். இந்த ஸம்ஸாரத்தில் பிறந்து தவிக்கின்ற தீனஞன என்னேத் தவிர வேறு யார் உன்ஞல் காப்பாற்றப் பட வேண்டியவர் உள்ளார்கள். யாருமேயில்லே. பொருளே கையில் வைத்துக்கொண்டு அதன் மதிப்பை அறிந்து அனுபவிக்கத் தெரியாதவன் கிருபணனல்லவா. அவன் அல்லவோ கஞ்சன் எனப்படுகிறுன். அவனேப் போலவே நானும்

ஆத்மஸாக்ஷாத்காரத்தை என்னிடமே வைத்துக்கொண்டு அதை அனுபவிக்காமல் கஞ்சனாக, கிருபணனாக இருக்கிறேன். இப்படிப்பட்ட கஞ்சப் பேர்வழிகளை காப்பதில் நீ தான் மிக ஸமர்த்தன். இம்மூவுலகிலும் உன்னைத் தவிர எனக்கு கதி யாருமில்லை.

प्रभुस्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषामपि किमुत बन्धुत्वमनयोः ।
त्वयैव क्षन्तव्याः शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवनमियं बन्धु-सरणिः ॥ १४ ॥

ப்ரபுஸ்த்வம் தீனானாம் கலு பரமபந்து: பசுபதே
ப்ரமுக்யோऽஹம் தேஷாமபி கிமுத பந்துத்வமனயோ:
த்வயைவ க்ஷந்த்வ்யா: சிவ மதபராதாச்ச ஸகலா:
ப்ரயத்னாத் கர்த்தவ்யம் மதவனமியம் பந்து-ஸரணி:

"வேதோக்தமான கர்மாக்களை அனுஷ்டிக்க வேண்டுமென்பது எனது கட்டளை. அந்த கர்மாக்களை நீ அனுஷ்டிக்கவில்லை. ஆகையால் நீ குற்றவாளி. உன்னை நான் எப்படி காப்பாற்ற முடியும்'' என்று நீ நினைக்கலாம். அப்படி என்றால் என்னை நீ காக்க ஓர் வழி இருக்கிறது. ஹே பசுபதே! நீ ஏழைகளின் பந்துவாக இருக்கிறாய். நீ தீனர்களுக்கு ஸகல ஐச்வர்யங்களையும் அளித்திடும் ப்ரபு வல்லவா. ஏழைகளுடைய ஏழ்மையை விலக்கும் மஹிமையுள்ளவன் நீ என்பது ப்ரஸித்தமான ஒன்று. அந்த ஏழைகளின் வரிசையில் நான் அக்ர கண்யனாக இருக்கிறேன். இவ்விதம் இருக்கும்போது உனக்கும் எனக்கும் இருக்கும் உறவை நான் சொல்லித் தான் நீ தெரிந்து கொள்ள வேண்டுமா? ஆனந்தமே வடிவெடுத்த ஹே சிவ! உன் கட்டளைகளை அனுஸரிக்காதது ஒரு குற்றம்; நீ விரும்பாத

வைகளை அனுஷ்டித்தேன் என்ற மற்ருேர் குற்றம். இப்படிப்பட்ட எனது பல வித குற்றங்களையும் மன்னித்து எவ்விதமாவது முயன்று என்னை நீ காக்க வேண்டும். இதுவே பந்துக்களின் கோட்பாடு. உனக்கும் எனக்கும் இருக்கின்ற உறவைக் கொண்டாவது நீ என்னை காப்பாற்றியாக வேண்டும்.

उपेक्षा नो चेत् किन्न हरसि भवद्-ध्यान-विमुखां
दुराशा-भूयिष्ठां विधि-लिपिमशक्तो यदि भवान् ।
शिरस्तद्वैधात्रं न नखलु सुवृत्तं पशुपते
कथं वा निर्यत्नं करनख-मुखेनैव लुलितम् ॥ १५ ॥

**உபேக்ஷா நோ சேத் கிம் ந ஹரஸி பவத்த்யான விமுகாம்**
**துராசாபூயிஷ்டாம் விதிலிபிமசக்தோ யதி பவான்|**
**சிரஸ்தத்வைதாத்ரம் ந நகலு ஸுவ்ருத்தம் பசுபதே**
**கதம் வா நிர்யத்னம் கர-நக-முகேனைவ லுலிதம் || 15 ||**

ஹே பசுபதே! உனக்கு என்னை காத்து ரக்ஷிப்பதில் அக்கரை இல்லை என எனக்கு தோன்றுகிறது. அப்படி இல்லையாகில், நான் உன்னை மனதில் நிலை நிறுத்தி த்யானம் செய்ய முடியாமல் என் மனதை அலைக்கழிக்கின்றதும் மிக மிக மட்டமானதும், மனதின் அடித்தளத்தில் அனாதி ஜன்மங்களாக வேரூன்றிப் பதிந்திருக்கின்றதுமான கெட்ட ஆசைகளை நீ ஏன் போக்கடிக்கவில்லை. 'அது உன் தலை எழுத்து. அது ப்ரஹ்மாவினுல் எழுதப்பட்டது. அதை போக்கடிக்க எனக்கு சக்தி இல்லை' என்று நீ சொல்வதும் சரியல்ல. ஏனென்ருல் எந்த ப்ரஹ்மா என் தலையில் எழுதினாரோ அவருடைய தலையை நீ ஒரு ஸமயம் உன் கை விரல் நகத்தின் நுனியால் வெகு சுலபமாக கிள்ளி எடுக்கவில்லையா? அப்படிப்பட்ட உனக்கு என் தலை எழுத்தை

அழித்து காப்பதில் எந்த கஷ்டமுமில்லை. ஆகையால் நீ என்னை ரக்ஷித்தே ஆகவேண்டும்.

विरिंचिर्दीर्घायुर्भवतु भवता तत्परशिर-
श्चतुष्कं संरक्ष्यं स खलु भुवि दैन्यं लिखितवान् ।
विचारः को वा मां विशद कृपया पाति शिव ते
कटाक्ष-व्यापारः स्वयमपि च दीनावनपरः ॥ १६ ॥

விரிஞ்சிர்தீர்க்காயுர்பவது பவதா தத்பரசிரச்-
சதுஷ்கம் ஸம்ரக்ஷ்யம் ஸ கலு புவி தைன்யம் லிகிதவான் ।
விசார: கோ வா மாம் விசத க்ருபயா பாதி சிவ தே
கடாக்ஷ-வ்யாபார: ஸ்வயமபி ச தீனாவனபர: ॥ 16 ॥

நிஷ்களங்கனும் ஆனந்தஸ்வரூபியுமான ஹே பரமேச்வர! இவன் ஏழ்மையால் வாடவேண்டும். கஷ்டங்களை அனுபவிக்க வேண்டும் என ப்ரஹ்மா தலையில் எழுதுகிறாரே அது உலகத்து மக்களுக்கு நன்மை தான். இதைக் குறித்து யோசிக்கவோ அல்லது கவலைப்படவோ என்ன இருக்கிறது. இதற்கு காரணம் என்னவென்றால் ப்ரஹ்மாவின் ஒரு தலையை மட்டும் வெட்டி மற்றத் தலைகளை நீ வெட்டாமல் விட்டிருப்பதினால் தான் அவர் என்னை மிக ஏழையாக, தீனனாக படைத்திருக்கிறார். அப்படி அவர் என்னை தீனனாக படைத்ததினால் தான் தீனர்களுக்கு மட்டுமே கிடைக்கின்ற உனது பரிவும் கடாக்ஷமும் எனக்கு கிடைத்திருக்கிறது. இவ்விதம் எனக்கு உதவி புரிந்துள்ள அந்த ப்ரஹ்மாவின் மற்ற நான்கு தலைகளையும் நீ காப்பாற்ற வேண்டும். அவர் நீண்ட ஆயுளோடும் இருக்க வேண்டும் என நான் உன்னை ப்ரார்த்திக்கிறேன்.

फलाद्वा पुण्यानां मयि करुणया वा त्वयि विभो
प्रसन्नेऽपि स्वामिन् भवदमल-पादाब्ज-युगलम् ।

कथं पश्येयं मां स्थगयति नमस्संभ्रमजुषां
निलिंपानां श्रेणिर्निज-कनक-माणिक्य-मकुटैः ॥ १७ ॥

பலாத்வா புண்யானும் மயி கருணயா வா த்வயி விபோ
ப்ரஸன்னேऽபி ஸ்வாமின் பவதமல–பாதாப்ஜ–யுகளம் ।
கதம் பச்யேயம் மாம் ஸ்தகயதி நமஸ்ஸம்ப்ரம-ஜுஷாம்
நிலிம்பானும் ச்ரேணிர்நிஜ-கனக–மாணிக்ய-மகுடை: ॥

உனது கடாக்ஷம் பரிபூரணமாக கிடைக்காத எவனுக்கும் உனது தர்சனம் துர்லபமே. எங்கும் நிறைந்து ஸர்வவ்யாபியாக விளங்குகின்ற ஹே பரமேச்வர! முற்பிறவியில் செய்த புண்ய பலத்தாலோ, அல்லது உனது கருணையாலோ ஹே ஸ்வாமீ! நீ என் முன் நேரடியாக தோற்றமளித்தாலும் கூட உனது ஸ்படிகம் போல் ஸ்வச்சமான திவ்ய சரணாரவிந்தங்களை கண்டு வணங்க முடியவில்லை. ஒப்பற்ற திவ்யரத்தினங்களால் செய்யப்பட்ட கிரீடங்களைத் தலையில் அணிந்திருக்கின்றவர்களும் உனது பாதார விந்தங்களை நமஸ்கரிப்பதற்கு மிகக் குழப்பத்துடன் என் முன் கூட்டம் கூட்டமாக குழுமியிருக்கின்றவர்களுமான தேவர்களின் வரிசை என்னை தர்சனம் பண்ண முடியாமல் உன்னை மறைத்து விடுகிறதே. நான் என்ன செய்வேன்? எவ்விதம் உன்னை காண்பேன்?

त्वमेको लोकानां परमफलदो दिव्यपदवीं
वहन्तस्त्वन्मूलां पुनरपि भजन्ते हरिमुखाः ।
कियद्वा दाक्षिण्य तव शिव मदाशा च कियती
कदा वा मद्रक्षां वहसि करुणा पूरितदृशा ॥ १८ ॥

த்வமேகோ லோகானும் பரமபலதோ திவ்யபதவீம்
வஹந்தஸ்த்வன்மூலாம் புனரபி பஜந்தே ஹரிமுகா: ।

B

**கியத்வா தாக்ஷிண்யம் தவ சிவ மதாசா ச கியதீ**
**கதா வா மத்ரக்ஷாம் வஹஸி கருணாபூரிதத்ருசா || 18 ||**

ஹே, மங்களரூப! தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று புருஷார்த்தங்களுக்கும் மேலான மிக உயர்ந்த மோக்ஷம் என்ற பதவியை அளித்திடவல்லமையுள்ள உன்னிடமிருந்து அடைந்த வைகுண்டம் முதலிய பதவிகளை விஷ்ணு முதலிய தெய்வங்கள் அவைகளை அடைந்தும் அதில் த்ருப்தியற்றவர்களாய் மோக்ஷத்தையே விரும்பி உன்னைச் சேவிக்கிறார்கள். நீ பக்தர்களின் தொண்டனாக இருக்கின்றாய். பக்தர்களின் விருப்பம் என்னவோ அதன் படியே நீ செய்கின்றாய். அவர்கள் வேண்டிக் கேட்பதையெல்லாம் அள்ளிஅள்ளி கொடுப்பதில் எப்படி ஒரு அளவு என்பது உனக்கு இல்லையோ அது போலவே எனது ஆசைகளுக்கும் அளவு எவ்வளவு என எனக்கு தெரியவில்லையே. என்னுடைய அஹங்காரத்தை ஒழித்து உலக பந்தம் என்ற முடிச்சை அவிழ்த்து கருணை நிறைந்த உனது கடாக்ஷத்தால் என்னைக் காப்பாற்றி எனக்கு மோக்ஷத்தை எப்பொழுது அளிக்க போகிறாய்?

दुराशा भूयिष्ठे दुरधिपगृहद्वारघटके
दुरन्ते संसारे दुरितनिलये दुःखजनके।
मदायासं किं न व्यपनयसि कस्योपकृतये
वदेयं प्रीतिश्चेत् तव शिव कृतार्थाः खलु वयम् ॥ १९ ॥

**துராசா-பூயிஷ்டே துரதிப-க்ருஹத்வார-கடகே**
**துரந்தே ஸம்ஸாரே துரித நிலயே து:க்கஜனகே |**
**மதாயாஸம் கிந் ந வ்யபநயஸி கஸ்யோபக்ருதயே**
**வதேயம் ப்ரீதிச்சேத் தவ சிவ க்ருதார்த்தா: கலு**
**வயம் || 19 ||**

ஹே சிவ ! அருவருக்கத்தக்க ஆசைகளால் நிறைந்ததும் கெட்ட வழிகளில் வாழ்கின்ற ப்ரமுகர்களின் வீடுகளில் ஏறி இறங்கி பிழைக்கின்ற நிலை நிறைந்ததும் முடிவில்லாத கெட்ட விஷயங்கள் நிறைந்ததும் ஸகல விதமான இன்னல்களுக்கும் துன்பங்களுக்கும் வாஸஸ்தலமாகவும் துன்பம் ஒன்றே நிரம்பியுமுள்ள இந்த ஸம்ஸாரத்தில் என்னுடைய சொல்லவொண்ணுத் துன்பங்களை நீ ஏன் போக்கடிக்கவில்லை? ஒரு வேளை ப்ரஹ்மா உன் பக்தனுயிற்றே. அவர் பொருட்டு அவருக்கு உபகாரம் செய்ய வேண்டுமென்று நீ என் துன்பங்களை அகற்றுமல் இருக்கிருயோ என்னவோ;பக்தர்களிடம் கொண்ட ப்ரீதியினுல் நீ பக்தர்களின் விருப்பு வெறுப்புக்களை அனுஸரித்து நடப்பவனுக இருக்கிருயே. அப்படியாகில் ப்ரஹ்மாவைப்போலவே நானும் உனது பக்தனே. என்னிடமும் உனது ப்ரீதி இருக்குமல்லவா. அப்படி இருக்கும் வரை நானும் என்னை போன்ற உனது பக்தர்களும் எல்லாவிதமான லாபங்களையும் அடைந்தவர்களாக ஆகிவிடுவோம். இது நிச்சயம்.

सदा मोहाटव्यां चरति युवतीनां कुचगिरौ
नटत्याशाशाखास्वटति झटिति स्वैरमभितः ।
कपालिन् भिक्षो मे हृदयकपिमत्यन्तचपलं
दृढं भक्त्या बद्ध्वा शिव भवदधीनं कुरु विभो ॥२०॥

**ஸதா மோஹாடவ்யாம் சரதி யுவதீனும் குசகிரௌ**
**நடத்யாசா-சாகாஸ்வடதி ஜடிதி ஸ்வைரமபித: |**
**கபாலின் பிக்ஷோ மே ஹ்ருதயகபி-மத்யந்த-சபலம்**
**த்ருடம் பக்த்யா பத்த்வா சிவ பவததீனம் குரு விபோ ||**

எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கின்ற ஹே பரமேச்வர ! மண்டையோட்டை கையில் வைத்திருப்பவரே! நீயோ

ஒரு பிக்ஷு. என் மனமோ ஒரு குரங்கு. எனது ஆசைகளோ கிளைகள் நிறைந்த ஒரு பெரிய மரமாக மோஹம் என்ற காட்டில் வளர்ந்து பரந்து கிடக்கிறது. இந்த குரங்கு இந்த மோஹவனத்தில் தன்னிஷ்டம் போல் நிச்சிந்தையாக ஸஞ்சரிக்கிறது. பெருத்து உயர்ந்த அழகாக இருக்கின்ற பெண்களின் மார்பகங்களில் இக்குரங்கு தாவுகிறது. இப்படி சுற்றியலையும் என் மனமாகிற குரங்கை ஹே பிக்ஷோ நீயே! வைத்துக்கொள். யாசகர்களின் கையில் குரங்கு ஒன்று இருப்பது உசிதமே. சஞ்சல ஸ்வபாவமுள்ள இக்குரங்கை கட்டுவதற்கு பக்தி இருக்கிறது. பக்தி என்ற கயிற்றால் இம்மனக் குரங்கை பலமாகக் கட்டி ஹே சிவ! நீயே வைத்துக்கொள். அதை உனக்கு அதீனமாக செய்துவிடு.

धृतिस्तंभाधारां दृढगुणनिबद्धां सगमनां
विचित्रां पद्माढ्यां प्रतिदिवस-सन्मार्ग-घटिताम् ।
स्मरारे मच्चेतः स्फुट-पट-कुटीं प्राप्य विशदां
जय स्वामिन् शक्त्या सह शिवगणै-स्सेवित विभो ॥

**த்ருதி-ஸ்தம்பாதாராம் த்ருடகுண-நிபத்தாம் ஸகமனும்**
**விசித்ராம் பத்மாட்யாம் ப்ரதிதிவஸ-ஸன் மார்க்ககடிதாம் |**
**ஸ்மராரே மச்சேத: ஸ்புட-பட-குடீம் ப்ராப்ய விசதாம்**
**ஜய ஸ்வாமின் சக்த்யா ஸஹ சிவகணை: ஸேவித விபோ ||**

மன்மதனை அழித்த ஹே பரமேச்வர! எனது மனம் கூடாரம் போன்றதாகும். கூடாரம் நிலையாக நிற்க உறுதியாக அதன் நடு மையத்தில் தூண் இருக்கிறது. அது போல எனது மனதில் உலகில் அனுபவிக்கப்படுகின்ற சுக துக்கங்கள் நிலையாக இருக்கிறது. கூடாரம் நிற்க எப்படி தூண் தேவையோ அது போல விஷயங்கள். விஷய சுகங்கள் இருந்தால் தான் மனம் இருக்கும். கயிற்றால் கூடாரம்

கட்டப்படுகிறது. ஸத்வ ரஜஸ் தமஸ் என்ற கயிற்ருல் மனம் கட்டப்பட்டுள்ளது, கூடாரம் விரும்பிய இடங்களில் எடுத்து செல்லப்படுவது போலவே எனது மனமும் நாலா விடங்களிலும் செல்கிறது. மனதில் பலவிதமான ஜன்மாக்களை கொடுக்கக் கூடிய நுண்ணிய வாஸனைகள் அல்லது விஷயங்களில் பற்றுதல் இருப்பது போல் கூடாரத்தில் பல விதவர்ணங்கள் அழகுறத் தீட்டப்பட்டுள்ளது. மனம் எப்பொழுதும் லக்ஷ்மி தேவியையே ப்ரார்த்திக்கிறது. கூடாரத்தில் தாமரைப் பூக்கள் தீட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நாளும் மனம் ப்ரம்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்கிறது. நிழல் நீர் முதலியவை எங்கு சுலபமாக கிடைக்கிறதோ, அங்குதான் கூடாரம் போடப்படுகிறது. ப்ரமதகணங்களால் ஸேவிக்கப்படுகின்ற ஹே விபோ! கூடாரம் போல இருக்கின்ற எனது மனதில் பார்வதிஸஹிதமாய் வந்திருந்து வாஸம் செய்து வெற்றியுடன் விளங்க வேண்டும்.

प्रलोभाद्यै-रर्थाहरणपरतन्त्रो धनिगृहे

प्रवेशोद्यक्तस्सन् भ्रमति बहुधा तस्करपते ।

इमं चेतश्चोरं कथमिह सहे शंकर विभो

तवाधीनं कृत्वा मयि निरपराधे कुरु कृपाम् ॥ २२ ॥

**ப்ரலோபாத்யைரர்த்தாஹரண-பரதந்த்ரோ தனிக்ருஹே**

**ப்ரவேசோத்யுக்தஸ்ஸன் ப்ரமதி பஹுதா தஸ்கரபதே |**

**இமம் சேதச்சோரம் கதமிஹ ஸஹே சங்கர விபோ**

**தவாதீனம் க்ருத்வா மயி நிரபராதே குரு க்ருபாம் || 22 ||**

திருடர்களுக்கும் தலைவனாக விளங்குகின்றவரே! ஸர்வ வ்யாபியான ஹே சங்கர! பிறரை ஏமாற்றி எவ்விதத்திலாவது பிறர் த்ரவயங்களை தனதாக்கிக் கொள்ள வேண்டுமென்ற பேராசையால் அதில் ஈடுப்பட்டிருக்கின்ற திருட

ஞன எனது மனம் பெரும் செல்வந்தர்களுடைய வீடுகளில் புகுந்து கொள்ளையடிப்பதில் ஜாகரூகனுக முயன்று கொண்டிருக்கிறது. பலவிதமாகச் சுற்றித்திரிகின்றதும் பாபங்களைச் செய்வதிலேயே ஈடுபட்ட குணங்களை உடையதுமான இந்த என் மனம் என்ற கள்வனை நான் எவ்விதம் பொறுத்துக் கொண்டிருப்பேன். இப்பொழுதே இவனை உனது அதீனமாக செய்து விட்டு, கள்ளங்கபடமற்ற என்னிடம் கருணை புரி.

करोमि त्वत्पूजां सपदि सुखदो मे भव विभो
विधित्वं विष्णुत्वं दिशसि खलु तस्याः फलमिति।
पुनश्च त्वां द्रष्टुं दिवि भुवि वहन् पक्षिमृगता-
मदृष्ट्वा तत्खेदं कथमिह सहे शङ्कर विभो ॥२३॥

**கரோமி த்வத்பூஜாம் ஸபதி ஸுகதோ மே பவ விபோ**
**விதித்வம் விஷ்ணுத்வம் திசஸி கலு தஸ்யா: பலமிதி ।**
**புனச்ச த்வாம் த்ரஷ்டும் திவி புவி வஹன் பக்ஷிம்ருகதா-**
**மத்ருஷ்ட்வா தத்கேதம் கதமிஹ ஸஹே சங்கர விபோ ॥**

எங்கும் நிறைந்த ஹே பரமேச்வர! நான் உன்னை பூஜிக்கிறேன். ஹே சங்கர! நீ தாமதமின்றி எனக்கு குறையற்ற நித்யமான மோக்ஷ சுகத்தை இப்பொழுதே அளித்திடுவாய். உன்னை பூஜிப்பதால் கிடைக்க கூடிய ப்ரஹ்ம பதவியோ அல்லது விஷ்ணுவின் பதவியோ பயனுக கிடைக்கும். அது எனக்குத் தேவை இல்லை. ஏனெனில் முன்னொரு சமயம் ப்ரஹ்மா ஹம்ஸமாக உருவெடுத்து உனது சிரஸ்ஸைத் தேடி ஆகாயத்தை நோக்கி சென்றார். அவரால் உனது சிரஸ்ஸை பார்க்க முடியவில்லை விஷ்ணு வராஹமாக உருக்கொண்டு உனது பாதங்களைத் தேடிப் பூமியை நோக்கிச் சென்று தோல்வியடைந்தார். அவருக்கு உனது பாத தர்சனம் கிடைக்க

வில்லை. ஆகையால் இவர்களுடைய பதவியால் எனக்கு எவ்விதப் பயனுமில்லை. ஹம்ஸமாகவோ, வராஹமாகவோ ஆகியும் உன் அடிமுடி காணமுடியாமல் ஏற்படுகின்ற சோகத்தையும் அவ்விதம் ம்ருகமாகவும் பறவையாகவும் உருமாறின பிறகும் உனது தர்சனம் கிடைக்கவில்லையே என்ற துக்கத்தையும் நான் எப்படி ஸஹிப்பேன்.

कदा वा कैलासे कनकमणिसौधे सहगणै-
र्वसन् शंभोरग्रे स्फुट-घटित- मूर्धाञ्जलिपुटः ।
विभो साम्ब स्वामिन् परमशिव पाहीति निगदन्
विधातॄणां कल्पान् क्षणमिव विनेष्यामि सुखतः ॥

கதா வா கைலாஸே கனகமணிஸௌதே ஸஹகணை:-
வஸன் சம்போரக்ரே ஸ்புட-கடித-மூர்த்தாஞ்ஜலிபுட: ।
விபோ ஸாம்ப ஸ்வாமின் பரமசிவ பாஹீதி நிகதன்
விதாத்ரூணும் கல்பான் க்ஷணமிவ விநேஷ்யாமி ஸுகத:

ஹே பரமேச்வர! ஸாம்பஸதாசிவனுக பரிவாரங்களுடன் உன்னைப் பூஜிப்பது என்பது மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனமாகும். உன்னை பூஜை செய்து கொண்டு உன் ஸந்நிதியில் இருக்க காலதாமதமாவதை பொறுக்க முடியாமல் என் நெஞ்சம் உருகுகிறதே. ஹே விபோ! கைலயங்கிரியில் பசும் பொன்மணிகளால் நிர்மிதமான உனது மாடமாளிகையின் உப்பரிகையில் ப்ரமதகணங்களோடு உனது முன்னால் நின்று கொண்டு எனது இருகரம் குவித்து சிரசு தலைக்கு மேலே வைத்து ஹே ஸாம்பபரமேச்வரா! ஸ்வாமி என்னைக் காப்பாற்று! காப்பாற்று!! என்று வெகு பலமாக உயர்ந்த குரலில் சொல்லிச் சொல்லி, ஸ்துதித்து ஸ்துதித்து சிவானந்தத்தில் மூழ்கிப் பரவசனுகி நான் என்னை மறந்த நிலை வரவேண்டும். அப்படி ஆனந்த வெள்ளத்தில் திளைத்து

பல ப்ரஹ்ம கற்பங்களை ஒரு விநாடியாகக் கழிக்கின்ற நிலை எனக்கு எப்பொழுது வரப்போகிறதோ?

स्तवैर्ब्रह्मादीनां जयजयवचोभिर्नियमिनां
गणानां केलीभिर्मदकलमहोक्षस्य ककुदि ।
स्थितं नीलग्रीवं त्रिणयनमुमाश्लिष्ट वपुषं
कदा त्वां पश्येयं करधृतमृगं खण्डपरशुम् ॥ २५ ॥

ஸ்தவைர்-ப்ரஹ்மாதீனும் ஜயஜய-வசோபிர்நியமினும்
கணனும் கேலீபிர்மதகல-மஹோக்ஷஸ்ய ககுதி ।
ஸ்திதம் நீலக்ரீவம் த்ரிணயனமுமாச்லிஷ்ட-வபுஷம்
கதா த்வாம் பச்யேயம் கரத்ருத ம்ருகம் கண்டபரசும் ॥

ஹே பரமேச்வர! ப்ரஹ்மா முதலிய தேவர்கள் உன்னை ஸ்துதித்துக்கொண்டும், வேதங்களில் விதிக்கப் பட்டவைகளை அனுஷ்டிக்கின்ற முனிச்ரேஷ்டர்கள் ஜய ஜய என உன் ஸந்நிதியில் ஜய கோஷம் எழுப்பிக் கொண்டும் நந்தி, ப்ருங்கி, சண்டீச்வரன் முதலியோர் நாட்டியம் கீதம் முதலிய கேளிக்கைகளால் உன்னை ஆனந்தப்படுத்திக் கொண்டும் இருக்கின்றவர்களாய் கொழுத்த திமிலையுடைய விருஷபத்தின் முதுகில் உமையவள் இடது பக்கத்தில் உன்னை தழுவிக்கொண்டு வீற்றிருக்க, மூன்று கண்களை யுடைய நீ கரங்களில் தாங்கிய மான், மழு இவைகளுடன் பாற்கடலைக் கடைந்த சமயத்தில் அதிலிருந்து வெளிப் பட்ட காலகூட விஷத்தை உட்கொண்டு, இவ்வுலகைக் காத்து அதனுல் உன் கழுத்து நீல நிறமாக ஆகி, நீலகண்ட ஞய் விளங்கிக் கொண்டிருக்கின்ற உனது கோலத்தை நான் எப்பொழுது காண்பேன்.

कदा वा त्वां दृष्ट्वा गिरिश तव भव्यांघ्रियुगलं
गृहीत्वा हस्ताभ्यां शिरसि नयने वक्षसि वहन् ।

समाश्लिष्याघ्राय स्फुटजलजगन्धान् परिमला-
नलभ्यां ब्रह्माद्यैर्मुदमनुभविष्यामि हृदये ॥ २६ ॥

கதா வா த்வாம் த்ருஷ்ட்வா கிரிச தவ பவ்யாங்க்ரியுகளம்
க்ருஹீத்வா ஹஸ்தாப்யாம் சிரஸி நயனே வக்ஷஸி வஹன் ।
ஸமாச்லிஷ்யாக்ராய ஸ்புட-ஜலஜ கந்தான் பரிமளா-
னலப்யாம் ப்ரஹ்மாத்யைர் முதமனுபவிஷ்யாமி ஹ்ருதயே

*ஹிமயமலையில் வஸிக்கின்ற ஹே பரமேச்வர! எல்லோருக்கும் நன்மையையும் சுகத்தையும் அளிக்கின்ற உன்னைப் பார்த்து ஸர்வக்ஷேமங்களையும் அளிக்கின்ற உனது இரு காலடிகளை என் கைகளில் ஏந்தி தலையிலும் எனது கண்களிலும், மார்பிலும் பக்தியுடன் ஒத்திக்கொண்டு நன்றாக விகஸித்த தாமரைமலரின் நறுமணத்தை முகர்ந்து பிரஹ்மாதி தேவர்களுக்கும் கிடைப்பதற்கு அரிதான மனச்சாந்தியை, ஆனந்தத்தை எப்பொழுது தான் அனுபவிக்கப்போகிறேனோ!*

करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ
गृहस्थे स्वर्भूजामर सुरभिचिन्तामणिगणे ।
शिरःस्थे शीतांशौ चरणयुगलस्थेऽखिलशुभे
कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥ २७ ॥

கரஸ்த்தே ஹேமாத்ரௌ கிரிச நிகடஸ்த்தே தனபதௌ
க்ருஹஸத்தே ஸ்வர்பூஜாமர-ஸுரபிசிந்தாமணிகணே ।
சிரஸ்த்தே சீதாம்சௌ சரணயுகல ஸ்த்தே/கிலசுபே
கமர்த்தம் தாஸ்யே/ஹம் பவது பவதர்த்தம் மம மன: ॥

*ஹே பரமேச்வர! மேருமலை தங்க மயமானது; அதை வில்லாக வளைத்து உன் கையில் தாங்கி த்ரிபுரஸம்ஹாரம்*

செய்தாய். அப்படிப்பட்ட தங்க மயமான மலையே உனது கையில் இருக்கிறபோது நான் உனக்கு எதை அளிப்பேன். பணத்திற்கு அதிபதியான குபேரன் உனது பக்தன், அவன் உன் பக்தனுகையினுல் உனது பக்கத்திலேயே இருக்கிறுன், ஆகையால் பணத்தை நான் உனக்கு அளித்தும் ப்ரயோஜனமில்லை. விரும்பியவைகளை அளிக்க கூடிய தேவலோகத்து கற்பகதரு, காமதேனு சிந்தாமணி முதலியவைகளும் உனக்கு வசமாக உனது வீட்டிலேயே உள்ளது. உனது இரு காலடிகளோ ஸர்வமங்களங்களையும் அளிக்க வல்லவை: மேலும் ஹ்ருதயத்திற்கு பரமசுகத்தை அளிக்கிற குளிர்ந்த சந்திரக்கலை உனது ஜடா முடியில் இருக்கிறது. இவ்விதம் ஸகல விதமான ஐச்வர்ய ஸம்பன்னனுக நீ இருக்கும் பொழுது உனக்கு நான் எதை அளிப்பது. எதை அளித்தாலும் அது உனக்கு ப்ரயோஜனப்படாது. ஆகையால் எனது மனதை உனக்கு அளிக்கிறேன், ஏற்றுக்கொள்.

सारूप्यं तव पूजने शिव महादेवेति संकीर्तने
सामीप्यं शिवभक्ति-धुर्य-जनता सांगत्यसंभाषणे ।
सालोक्यं च चराचरात्मकतनुध्याने भवानीपते
सायुज्यं मम सिद्धमत्र भवति स्वामिन् कृतार्थोऽस्म्यहम् ॥

**ஸாரூப்யம் தவ பூஜனே சிவ-மஹாதேவேதி ஸங்கீர்த்தனே**
**ஸாமீப்யம் சிவ-பக்தி-துர்ய-ஜனதா-ஸாங்கத்ய-ஸம்பாஷணே.**
**ஸாலோக்யஞ்ச சராசராத்மகதனு த்யானே பவானீபதே**
**ஸாயுஜ்யம் மம ஸித்தமத்ர பவதி ஸ்வாமின் க்ருதார்த்தோ/**
**ஸ்மயஹம் || 28 ||**

ஹே பார்வதீபதே! உன்னை பூஜை செய்வதால் உன் ரூபமாக ஒருவன் ஆகிறுன். அதாவது ஸாரூப்யம் என்ற ஸித்தி அவனுக்கு கிடைக்கிறது. சிவ! மஹாதேவ! என

எவனொருவன் உன்னுமாவை உள்ளம் கனிந்து அன்போடு ஸங்கீர்த்தனம் செய்கிருனே அவனுக்கு ஸாமீப்யம் என்ற ஸித்தி ஏற்படுகிறது, அதாவது நீ இருக்குமிடத்திலேயே உன்னுடன் கூடவே வஸிக்கும் பாக்யம் கிடைக்கிறது. சிவ பக்தி என்ற சுமையை தாங்கிய சிவ பக்தர்களின் ஸங்கத்துடன் சேர்ந்து அவர்களுடன் கலந்து பேசிப் பழகி வாழ்பவர்களுக்கு ஸாலோக்யம் கிடைக்கிறது. அவன் நீ இருக்கும் லோகத்திலேயே இருக்கும் பாக்யம் அடைகிருன். அசைகின்றதும் அசையாததுமாக இவ்வுலகத்துள்ளவைகளை எல்லாம் நீயாக, உன் திருமேனியாக நினைத்து எவன் ஒருவன் த்யானம் செய்கிருனே அவன் உன்னேடு இரண்டறக் கலந்து ஸாயுஜ்யத்தை அடைகிருன். உன்னுடன் ஐக்யமாகி விடுகிருன். நான் இப்பிறவியிலேயே ஸாயுஜ்யத்தையடைந்து க்ருதார்த்தன் ஆகிறேன்.

**त्वत्पादांबुजमर्चयामि परमं त्वां चिन्तयाम्यन्वहं**
**त्वामीशं शरणं व्रजामि वचसा त्वामेव याचे विभो ।**
**वीक्षां मे दिश चाक्षुषीं सकरुणां दिव्यैश्चिरं प्रार्थितां**
**शंभो लोकगुरो मदीयमनसः सौख्योपदेशं कुरु ॥ २९ ॥**

**த்வத் பாதாம்புஜமர்ச்சயாமி பரமம் த்வாம் சிந்தயாம்யன்ஹம்**
**த்வாமீசம் சரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே விபோ**
**வீக்ஷாம் மே திச சாக்ஷுஷீம் ஸகருணாம் திவ்யைச்சிரம் ப்ரார்த்திதாம்**
**சம்போ லோககுரோ மதீய மனஸ: ஸௌக்யோபதேசம் குரு ||**

பலவிதமாக ப்ரகாசிக்கின்ற ஹே விபோ! ஸர்வலோகங்களிலும் உத்தமமாக விளங்குகின்ற உனது தாமரைத் திருவடிகளை ஸதாஸர்வகாலமும் என்னிருகைகளால் பூஜிக்கிறேன். தினந்தோறும் ஸர்வச்ரேஷ்ட புருஷனுன உன்னை, பக்தர்களுக்கு அதீனனுன உன்னை த்யானிக்கிறேன். ஸர்வ

லோகங்களையும் காத்து ரக்ஷிக்கின்ற ஜகதீசனை, ஜனனம் மரணம் என்ற துக்கத்திலிருந்து காப்பாற்றுகின்ற உன்னைச் சரணமடைகிறேன். ஸுகத்தை கொடுக்கும் வல்லமையுடைய ஹே சம்போ! நீண்ட காலமாக தேவர்கள் உன் கடைக்கண் பார்வையை விரும்பி ப்ரார்த்தித்துக் கொண்டு காத்திருக்கிறார்கள். அந்த கடைக்கண் பார்வையை எனக்குக் கொடு என்று வாக்கினால் வேண்டிக்கொள்கிறேன். பக்தர்களுக்கு ரஹஸ்யமான தத்வார்த்தங்களை போதிக்கின்ற ஹே லோக குரோ! அநித்யமான விஷய ஸுகங்களில் ஈடுபடுகின்ற என் மனதை பரப்ரஹ்ம ஸ்வரூபத்தில் ஈடுபடுத்தி நிலையான பேரின்பத்தை அளிக்கின்ற ஆத்மஞானத்தை எனக்கு உபதேசம் செய்.

वस्त्रोद्धूतविधौ सहस्रकरता पुष्पार्चने विष्णुता
गन्धे गन्धवहात्मताऽन्नपचने बर्हिर्मुखाध्यक्षता ।
पात्रे काञ्चनगर्भतास्ति मयि चेद्बालेन्दुचूडामणे
शुश्रूषां करवाणि ते पशुपते स्वामिन् त्रिलोकीगुरो ॥

**வஸ்த்ரோத்தூதவிதௌ ஸஹஸ்ரகரதா புஷ்பார்ச்சனே விஷ்ணுதா**
**கந்தே கந்தவஹாத்மதா/ன்னபசனே பர்ஹிர்முகாத்யக்ஷதா!**
**பாத்ரே காஞ்சன கர்ப்பதாஸ்தி மயி சேத் பாலேந்து சூடாமணே**
**சுச்ரூஷாம் கரவாணி தே பசுபதேஸ்வாமின் த்ரிலோகீகுரோ**

ஸம்ஸாரபந்தத்திலிருந்து மக்களை காப்பாற்றுகின்ற ஹே பசுபதே! அற்ப மனிதனான நான் உனக்குப்பணிவிடை செய்து, உன் அருளை பெறுவது என்பது அவ்வளவு சுலபமல்ல. நீ ஸர்வவ்யாபியாக எங்கும் நிறைந்திருப்பவன். உனக்கு ஆடையுடுத்த என் இருகைகள் போதாது. ஸூர்யன் ஸஹஸ்ரகரங்களையுடையவன். நான் ஸூர்யனாக ஆனால் தான் ஸர்வலோகவ்யாபியான உனக்கு "வஸ்த்ரம்

தாரயாமி'' என வஸ்த்ர தாரணம் செய்ய முடியும். பால சந்த்ரனை சூடாமணியாகதரித்திருக்கின்றவனே! விஷ்ணுவும் எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பவர், ஸர்வவ்யாபியான உன்னை ஸர்வவ்யாபியான ஒருவரால் தான் அர்ச்சிக்க முடியும். ஆகையால் வாயுபகவான் எல்லாவுலகங்களிலும் ஸஞ்சரிப்பவர். உலகங்களிலிருக்கின்ற சுகந்தத்ரவ்யங்களை நன்கு பகுத்தறிந்து பரப்பும் சக்தி பெற்றவர் அவரேயாவர். ''கந்தான் தாரயாமி'' என சொல்லி உனக்கு சந்தனப் பொட்டு வைத்து உபசரித்திட நான் வாயுவாக ஆகவேண்டும். திவ்யான்னங்களை பக்குவமாக சமைத்து உனக்கு கொடுதது உபசரிக்க நான் தேவேந்திரனாக ஆக வேண்டும். அர்க்யபாத்யாதிகளை அளிப்பதில் ப்ரஹ்மாவே சிறந்தவர். உனக்கு அர்க்ய பாத்ரம் முதலியவைகளை கொடுத்துபசரித்திட நான் ப்ரஹ்மாவாக ஆகவேண்டும். ஆகையால், ஹே ஸ்வாமின்! ரஹஸ்யார்த்தங்களை போதிக்கின்ற ஹே த்ரிலோககுரோ! ஸூர்யனாகவும், விஷ்ணுவாகவும், ப்ரஹ்மாவாகவும், வாயுவாகவும், தேவேந்திரனாகவும் நான் எப்பொழுது ஆகிறேனோ அப்பொழுது தான் உனது பூஜையை செய்ய முடியும். அல்லாமல் அவ்வளவு மஹிமை பொருந்தியவனை அற்பனான நான் எவ்வாறு பூஜை செய்ய முடியும்.

नालं वा परमोपकारकमिदं त्वेकं पशूनां पते
पश्यन् कुक्षिगतान् चराचरगणान् बाह्यस्थितान् रक्षितुम् ।
सर्वामर्त्यपलायनौषधमतिज्वालाकरं भीकरं
निक्षिप्तं गरलं गले न गलितं नोद्गीर्णमेव त्वया ॥

நாலம் வா பரமோபகாரகமிதம் த்வேகம் பசூனும் பதே
பச்யன் குக்ஷிகதான் சராசரகணான் பாஹ்யஸ்த்திதான்
ரக்ஷிதும் ||

**ஸர்வாமர்த்ய பலாயநௌஷதமதிஜ்வாலாகரம் பீகரம**
**நிக்ஷிப்தம் கரலம் கலே ந கலிதம் நோத்கீர்ண மேவத்வயா ||**

ஹே பசுபதே! பசுப்ராயமாக வாழ்கின்ற மக்களேயும் தேவர்களேயும் காப்பாற்றுகிற உன் கருணையை என்ன வென்று சொல்வது. ஒரு சமயம் தேவர்களும் அஸுரர் களுமாகச் சேர்ந்து க்ஷீர ஸமுத்ரத்தை கடைந்த காலத்தில் அதிலிருந்து, பயங்கரமான மிகக்கொடிய காலகூட விஷம் வெளிப்பட்டது. அதைக்கண்ட தேவர்கள் அங்கிருந்து பயந்து ஓடி விட்டார்கள். உனது வயிற்றின் உள்ளிலும் வெளியிலும் இருக்கின்ற ஜங்கம தாவரங்களின் கூட்டங் களை காப்பாற்ற வேண்டுமென்று எண்ணி தீர்க்கமாக யோசித்த நீ மிகக் கொடியதும் பயங்கரமானதும் மிகுந்த விஷ ஜ்வாலையை கக்குகின்றதுமான அந்த விஷத்தை உண்டு பயந்து நடுநடுங்கி ஓட்ட மெடுத்த தேவர்களின் நோய்க்கு மருந்தாக அவ்விஷத்தை உனது கழுத்திலேயே நிறுத்தியும் விட்டாய். விழுங்க வில்லை. ஏனென்றால் உனது வயிற்றிலிருக்கின்ற உலகம் அழியக் கூடாதல்லவா? வெளி யில் உமிழவுமில்லை. ஏனெனில், வெளியிலிருக்கின்ற உலகம் அழிந்து விடுமே! என்று தான். இவ்வளவு மேலான மிக சிறந்த நீ செய்த உபகாரம் ஒன்றே உனது கருணை யையும் அன்பையும் மகிமையையும் அறிய போதாதா.

**ज्वालोग्रस्सकलामराति-भयदः क्ष्वेलः कथं वा त्वया**
**दृष्टः किं च करे धृतः करतले किं पक्व-जंबूफलम् ।**
**जिह्वायां निहितश्च सिद्धघुटिका वा कण्ठदेशे भृतः**
**किं ते नीलमणिर्विभूषणमयं शंभो महात्मन् वद ॥**

**ஜ்வாலோக்ர: ஸகலாமராதிபயத: க்ஷ்வேல: கதம் வா த்வயா**
**த்ருஷ்ட: கிஞ்ச கரே த்ருத: கரதலே கிம்பக்வஜம்பூபலம்**

ஜிஹ்வாயாம் நிஹிதச்ச ஸித்த குடிகா வா கண்டதேசே ப்ருத:
கிம் தே நீலமணிர் விபூஷணமயம் சம்போ மஹாத்மன் வத ||

எல்லையில்லா மகிமையுடைய ஹே பரமேச்வர! அதி பயங்கரமான அக்னி ஜ்வாலையை கக்கி தேவர்களை பயந்து ஓட ஓட விரட்டியடித்த அந்த கொடிய காலகூடவிஷத்தை நீ எப்படித்தான் பார்த்தாயோ? மேலும் அதை எப்படித் தான் திருத்தாமரை கரங்களில் எடுத்தாயோ? அதை உனது உள்ளங்கையில் எடுத்து வைத்துக்கொண்டாயே. நன்கு பழுத்த கருநாவற்பழமா அது? அதோடு அல்லாமல் உனது நாவில் வைத்துக்கொண்டயே. ஸித்தர்கள் உட்கொள்வதற்கு உபயோகப்படுத்துகின்ற மாத்திரையா அது? கழுத்தில் அலங்காரமாக அணியப்படுகின்ற நீல மணிக்கல்லென்று நினைத்தா அந்த விஷத்தை விழுங்கி உனது கழுத்தில் நிறுத்திக்கொண்டாய். ஹே பரமேச்வரா! சொல்.

नालं वा सकृदेव देव भवतस्सेवा नतिर्वा नुतिः
पूजा वा स्मरणं कथाश्रवणमप्यालोकनं मादृशाम् ।
स्वामिन्नस्थिर देवतानुसरणायासेन किं लभ्यते
का वा मुक्तिरितः कुतो भवति चेत् किं प्रार्थनीयं तदा ॥

நாலம் வா ஸக்ருதேவ தேவ பவதஸ் ஸேவா நதிர் வா நுதி:
பூஜா வா ஸ்மரணம் கதாச்ரவண மப்யாலோகனம் மாத்ருசாம்
ஸ்வாமின்னஸ்த்திர தேவதானுஸரணயாஸேன கிம் லப்யதே
கா வா முக்தி ரித: குதோ பவதி சேத் கிம் ப்ரார்த்தனீயம் ததா

ஹே அனுதரக்ஷக! தேவ தேவ! த்ரிகரணங்களையும் உனக்கு அர்ப்பணித்து உன்னை பக்தியோடு நமஸ்கரித்தால் அல்லது உனது ஸ்தோத்ரங்களை பாராயணம் செய்தால்,

அல்லது உனது புண்ய கதையை கேட்பதினுல் பரிவாரங்களுடன் ஸாம்பபரமேச்வரனுக விதிப்படி பூஜை செய்வதினுல் அல்லது உனது மங்கள விக்ரஹத்தை ஒரு தடவையாவது கண்ணுறக் கண்டு உனது சேவையை செய்வதினுல் என் போன்றவர்களுக்கு போதாதா. அது முக்தியை கொடுக்காதா? நிச்சயமாக அது முக்தியை கொடுக்கும். இந்த வழிகளல்லாமல் மோக்ஷத்திற்கு வேறு ஒரு உபாயம் உண்டா? இல்லவே இல்லை. மேலே சொன்ன வழிகளையனுஸரித்து வாழ்வதால் முக்தி கிடைக்கிறது என்றிருக்குமேயானுல், என்றோ ஒரு நாள் அழியப் போகின்ற மற்ற தேவர்களை உபாஸித்து, த்ரிகரணங்களை கஷ்டப்படுத்துவதினுல் என்ன ப்ரயோஜனம். என்ன லாபம். ஒரு பயனுமில்லை. அந்த தேவதைகளை ப்ரார்த்தித்து, த்ருப்தி செய்து மனிதன் பெறுவதற்கு என்ன இருக்கிறது, ஒன்றுமேயில்லை.

किं ब्रूमस्तव साहसं पशुपते कस्यास्ति शंभो भव-
द्धैर्यं चेदृशमात्मनः स्थितिरियं चान्यैः कथं लभ्यते ।
भ्रश्यद्देवगणं त्रसन्मुनिगणं नश्यत्प्रपञ्चं लयं
पश्यन्निर्भय एक एव विहरत्यानन्दसान्द्रो भवान् ॥

கிம் ப்ரூமஸ்தவ ஸாஹஸம் பசுபதே கஸ்யாஸ்தி சம்போபவத்
தைர்யஞ்சேத்ருசமாத்மன: ஸ்திதிரியம்சான்யை: கதம்லப்யதே
ப்ரச்யத் தேவகணம் த்ரஸன்முனிகண நச்யத் பரபஞ்சம் லயம்
பச்யந் நிர்ப்பய ஏக ஏவ விஹரத்யானந்த ஸாந்த்ரோ பவான் ||

ஜீவகோடிகளை பரிபாலித்தருள் பாலிக்கின்ற ஹே சம்போ உனது தன்னிகரற்ற துணிச்சலை என்னவென்று சொல்வது. உனக்கிருக்கும் தைரியம் யாருக்குத் தான் இருக்கிறது. உன் தனிப் பெருமையை என்னவென்று சொல்வது.

ப்ரளய காலத்தில் நீ இருக்கும் நிலையை யார்தான் அடைய முடியும்? யாராலுமே முடியாது. ஹே பரமேச்வரா! ப்ரளய காலத்தில் முனிவர்களின் கூட்டங்களும் தேவ ஸமூஹங்களும் தங்கள் தங்கள் பதவிகளை விட்டு அனைவரும் அழிந்து விடும் காலத்தில் நீ ஒருவனே பயமேதுமின்றி இப்ரபஞ்சம் அழிவதை பார்த்துக் கொண்டு ஆனந்த கனமாக ஆகி மிக களிப்புடன் ப்ரளயத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிருய். இவ்வதிசயமான நிலையை யார் தான் அடைய முடியும்.

योगक्षेम-धुरंधरस्य सकलः श्रेयःप्रदोद्योगिनो
दृष्टादृष्टमतोपदेशकृतिनो बाह्यान्तर-व्यापिनः ।
सर्वज्ञस्य दयाकरस्य भवतः किं वेदितव्यं मया
शंभो त्वं परमान्तरंग इति मे चित्ते स्मराम्यन्वहम् ॥

**யோகக்ஷேமதுரந்தரஸ்ய ஸகல:ச்ரேய: ப்ரதோத்யோகினோ**
**த்ருஷ்டாத்ருஷ்டமதோபதேசக்ருதினோ பாஹ்யாந்தரவ்யாபின:**
**ஸர்வஜ்ஞஸ்ய தயாகரஸ்ய பவத: கிம் வேதிதவ்யம் மயா**
**சம்போ த்வம் பரமாந்தரங்க இதி மே சித்தே ஸ்மராமயன்வஹம்.**

ஹே சம்போ! அடைவதற்கு அரிதானவைகளை அடையும் படி செய்கிருய். அடைந்தவற்றை நிரந்தரமாக காப்பாற்றி எனக்கருள் பாலிக்கும் பாரத்தை சுமந்து கொண்டிருக்கிருய். எனது பலவிதமான நன்மைகளுக்காகவும் நீ ஸதா முயற்சி செய்கிருய்; இவ்வுலகத்தில் எனது விருப்பம் எதுவோ அதையளிப்பதிலும் பரலோகத்தில் எனக்கு எது விருப்பமோ அதையுமளிப்பதில் நீயே சக்தியுள்ளவன். எனக்குள்ளேயும் வெளியிலும் எல்லா இடங்களிலும் நிறைந்து, எல்லாமுமறிந்தவனுய், கருணையின் வடிவமாக இருக்கிற உன்னிடம் நான் தெரிவித்துக் கொள்ள என்ன

C

இருக்கிறது. நீ எனக்கு ஆப்த நண்பன் என அனுதினமும் என் சித்தத்தில் உன்னை வைத்து ஸ்மரிக்கிறேன்.

भक्तो भक्तिगुणावृते मुदमृतापूर्णे प्रसन्ने मनः-

कुंभे सांब तवांघ्रिपल्लवयुगं संस्थाप्य संवित्फलम् ।

सत्वं मन्त्रमुदीरयन्निजशरीरागारशुद्धिं वहन्

पुण्याहं प्रकटीकरोमि रुचिरं कल्याणमापादयन् ॥३६॥

பக்தோ பக்திகுணவ்ருதே முதம்ருதா பூர்ணே ப்ரஸன்னேமன:-
கும்பே ஸாம்ப தவாங்க்ரிபல்லவயுகம் ஸம்ஸ்த்தாப்ய ஸம்வித் பலம் |

ஸத்வம் மந்த்ரமுதீரயந்நிஜசரீராகாரசுத்திம் வஹன்
புண்யாஹம் ப்ரகடீகரோமி ருசிரம் கல்யாணமாபாதயன் ||

ஹே ஸாம்பமூர்த்தி! உன் சரணாரவிந்த த்யானமும் உனது தாரக நாமாவை உச்சரிப்பதும் ஸகல க்ஷேமங்களையும் அளிக்க வல்லது. மங்களகரமான வைதீக கர்மாக்களை செய்ய புண்யாஹவாசனம் செய்யப்படுகிறது. ஒரு கலசத்தில் நூல்களைச் சுற்றி அதில் தீர்த்தத்தை நிரப்பி மாவிலைகளை வைத்து தேங்காயையும் வைக்கிறார்கள், பிறகு வேத மந்த்ரங்களைச்சொல்லி புண்யாஹவாசனம் செய்கிறார்கள். என்னை போன்ற பக்தனே தனது உடலாகிய வீட்டைச் சுத்தமாக்கிக் கொண்டு மனத்தையே புண்யாஹ கலசமாக வைத்து பக்தி என்ற நூலால் அக்கலசத்தைச் சுற்றி அதில் எனது ஸந்தோஷம் என்ற ஜலத்தையும் பரிபூர்ணமாக நிரப்பி உனது சரணங்களை மாவிலைகளின் ஸ்தானத்தில் வைத்து அதன் மேல் ஞானம் என்ற தேங்காயையும் வைத்து உனது நாமஸங்கீர்த்தனமென்ற (பஞ்சாக்ஷரத்தை) மந்திரத்தை சொல்லி நான் புண்யாஹ வசனத்தை நடத்துகிறேன்.

आम्नायांबुधिमादरेण सुमनः संघाः समुद्यन्मनो
मन्थानं दृढभक्ति रज्जु सहितं कृत्वा मथित्वा ततः ।
सोमं कल्पतरुं सुपर्व सुरभिं चिन्तामणिं धीमतां
नित्यानन्दसुधां निरन्तररमासौभाग्यमातन्वते ॥ ३७ ॥

ஆம்நாயாம்புதிமாதரேண ஸுமன: ஸங்கா: ஸமுத்யன்மனோ
மந்தானம் த்ருடபக்திரஜ்ஜுஸஹிதம் க்ருத்வா மதித்வா தத: |
ஸோமம் கல்பதரும் ஸுபர்வஸுரபிம் சிந்தாமணிம் தீமதாம்
நித்யானந்த ஸுதாம் நிரந்தரரமாஸௌபாக்யமாதன்வதே ||

ஹே பரமேச்வரா! தேவர்கள் மந்தரமலையை மத்தாக்கி வாஸுகியை கயிருகக் கொண்டு பாற்கடலைகடைந்து காமதேனு, கற்பகவ்ருக்ஷம், லக்ஷ்மீ, சந்த்ரன், அம்ருதம் முதலியவைகளைப் பெற்ருர்கள். வேதங்களை நன்கு கற்றறிந்து மனதைச்சுத்தமாக்கிக் கொண்ட வேதவிற்பன்னர்கள் தங்கள் தங்கள் மனதை மத்தாக்கி பக்தியாகிற கயிற்ருல் வேதமென்ற ஸமுத்திரத்தை ஆதரவோடு நன்கு கடைந்தெடுத்து உன்னை அடைகிருர்கள். காமதேனுவாக, கற்பகத்தருவாக, அழியாச்செல்வமாக, உமையுடன் கூடின ஸோம சேகரனுக ஸேரானந்தத்தின் வடிவாக அம்ருதமாக அவர்களுக்கு நீ கிடைத்திருக்கிருய்.

प्राक्पुण्याचलमार्गदर्शित सुधामूर्तिः प्रसन्नश्शिवः
सोमस्सद्गुण सेवितो मृगधरः पूर्णस्तमोमोचकः ।
चेतः पुष्करलक्षितो भवति चेदानन्दपाथो निधिः
प्रागल्भ्येन विजृम्भते सुमनसां वृत्तिस्तदा जायते ॥ ३८ ॥

ப்ராக்புண்யாசலமார்க்கதர்சித–ஸுதாமூர்த்தி: ப்ரஸன்ன: சிவ:
ஸோமஸ்ஸத்குணஸேவிதோ ம்ருகதர: பூர்ணஸ்தமோமோசக:|

**சேத: புஷ்கரலக்ஷிதோ பவதி சேதானந்தபாதோ நிதி:**
**ப்ராகல்ப்யேன விஜ்ரும்பதே ஸுமனஸாம் வ்ருத்திஸ்ததா**
**ஜாயதே ||**

ஹே புண்யமூர்த்தி! ஆகாயத்தில் காணப்படும் சந்திரனுக்கும் உனக்கும் இருக்கிற ஒற்றுமை என்னே! முன் ஜன்மாக்களில் செய்த புண்யம் மலை போல்குவிந்து கிடக்கிறது. அப்புண்ய மலையின் வழியாகக் காண்பிக்கப்பட்ட அமுதமயமான உடலையுடையவன் நீ. சந்திரனும் கிழக்குத் திசையில் அமுதமயமான உடலுடன் ப்ரகாசிக்கிறான். நீயும் சந்திரனும் மாசற்றவர்கள். சுத்தர்களாய் சுகஸ்வருபர்களாக இருக்கிறீர்கள். சந்த்ரன் ஆகாயத்தில் நக்ஷத்ரக் கூட்டங்களால் சூழப்பட்டவன். நீயோ ஸாது ஜனங்களாலும் முனிவர்களாலும் சூழப்பட்டவன். சந்த்ரனில் மான் தென்படுகிறது. நீ மானைக்கையில் வைத்திருக்கிறாய் பதினாறு கலைகளோடு பூரண சந்த்ரனாக இருக்கிற நீயும் சந்திரனை போல பூர்ணமாய் எங்கும் நிறைந்து ப்ரகாசிக்கிறாய். இருட்டை சந்த்ரன் அழிப்பது போல பக்தர்களின் அஞ்ஞானமாகிய அந்தகாரத்தை அழித்து விடுதலையளிக்கிறாய். சந்திரன் ஸோமன். நீ உமையுடன் கூடினவன், ஆகையால் ஸோமன். சந்த்ரன் ஆகாயத்தில் காணப்படுபவன்; நீ பக்தர்களின் சிதாகாசத்தில் தென்படுகிறவன். பூரண சந்த்ரனை கண்டு கடல் பொங்குவது போல் உன்னை ஹ்ருதயாகாசத்தில்கண்டு ஆனந்தக்கடல் பொங்குகின்றது. மனதை நன்கு பக்குவப் படுத்திய வித்வான்களுக்கு அந்த ஆனந்த கடலில் மூழ்கி அதையனுபவிக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டாகிறது.

**धर्मो मे चतुरंघ्रिकस्सुचरितः पापं विनाशं गतं**
**कामक्रोधमदादयो विगलिताः कालाः सुखाविष्कृताः ।**

ज्ञानानन्दमहौषधिः सुफलिता कैवल्यनाथे सदा
मान्ये मानसपुण्डरीकनगरे राजावतंसे स्थिते ॥२९॥

தர்மோ மே சதுரங்க்ரிகஸ்ஸுசரித: பாபம் விநாசம் கதம்
காமக்ரோதமதாதயோ விகலிதா: காலா: ஸுகாவிஷ்க்ருதா: |
ஜ்ஞானனந்தமஹௌஷதி: ஸுபலிதா கைவல்யநாதே ஸதா
மான்யே மானஸ புண்டரீகநகரே ராஜாவதம்ஸே ஸ்த்திதே ||

ஒரு நாட்டை சிறந்த ஒரு அரசன் ஏகச்சக்ராதிபதியாக ஆண்டு வந்தால், அந்நாடு செழிப்புடனும் பகைவர்களால் தாக்கப்படாமலும் பெரியோர்களால் மதிக்கப்பட்டும் தர்மங்கள் அனுஷ்டிக்கப்பட்டும் விளங்கும். அந்நாட்டில் வாழ்கின்ற மக்களும் பரமஸௌக்யத்துடன் வாழ்வார்கள். சந்த்ரனை தன் தலைக்கு ஆபரணமாகச் சூடிய பரமேச்வரன் தாமரை மலரையொத்த பட்டணமாகிய எனது மனத்தில் மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்கு ஏகநாதனாய் இருக்கையில் நான்கு கால்களையுடைய தர்மம் வெகு நன்ருக அனுஷ்டிக்கப்பட்டு, எனது பாபமானது அடியோடு அழிந்து விட்டது. எனது மனம் என்ற பட்டணத்தில் பரமேச்வரன் ராஜசேகரனாக கொலுவிருக்குங்கால் அந்த ராஜ்யத்தின் எதிரிகளான காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற பகைவர்கள் அடியோடு ஒழிந்து விட்டனர். இவைகள் யாவும் என்னை விட்டு விலகி விட்டன. வருடம், மாதம், பக்ஷம் என்ற காலங்கள் எனக்குச் சுகத்தையே அளிக்கின்றன. அறிவு, ஆனந்தம் என்ற ஓஷதி எல்லாக் காலங்களிலும் எப்பொழுதும் நற்பயனை அளிப்பதாய் ஆகிவிட்டது.

धीयन्त्रेण वचोघटेन कविताकुल्योपकुल्याक्रमै-
रानीतैश्च सदाशिवस्य चरिताम्भोराशिदिव्यामृतैः ।

हृत्केदारयुताश्च भक्तिकलमाः साफल्यमातन्वते
दुर्भिक्षान्मम सेवकस्य भगवन् विश्वेश भीतिः कुतः ॥

தீயந்த்ரேண வசோகடேனே கவிதாகுல்யோபகுல்யாக்ரமை
ரானீதைச்ச ஸதாசிவஸ்ய சரிதாம்போராசிதிவ்யாம்ருதை: |
ஹ்ருத்கேதாரயுதாச்ச பக்தி கலமா: ஸாபல்யமாதன்வதே
துர்பிக்ஷான்-மம ஸேவகஸ்ய பகவன் விச்வேச பீதி: குத: ||40||

ஞான வைராக்யாதி ஷட்குண ஸம்பன்னனுன ஹே உலக நாயக! ஓர் உழவன் அவனது வயலை நன்ருக செப்பனிட்டு அதற்கு நீர் பாய்ச்சி பயிர்களுக்கு வேண்டிய உரங்களையு மிட்டு வளர்த்தால் அதன் பயனை அவன் அடைவான். அவனுக்கு பஞ்சத்தால் பயம் எப்படி உண்டாகாதோ அது போல ஹே ஜகதீச! நான் எனது இதயமாகிற வயலில் பக்தி என்ற பயிரை நட்டு எனது புத்தி என்ற ராட்டினத் தால் உனது திவ்யசரிதம் என்ற சுத்தமான நீரை எனது வாக்காகிற குடத்தால் ஏந்தி கவிதையாகிற கால்வாய் வழி யாக பாய்ச்சுகிறேன். அதன் பயனுக பக்தி என்ற பயிர் செழிப்பாக வளர்ந்து எனக்கு பயன் கிடைத்திருக்கிறபடி யால் பஞ்சத்தால் என்ன ஆகுமோ என்ற பயம் எனக்கு எவ்வாறு உண்டாகும்.

पापोत्पात विमोचनाय रुचिरैश्वर्याय मृत्युंजय
स्तोत्रध्याननतिप्रदक्षिणसपर्यालोकनाकर्णने ।
जिह्वाचित्तशिरोङ्घ्रिहस्तनयनश्रोत्रैरहं प्रार्थितो
मामाज्ञापय तन्निरूपय मुहुर्मामेव मा मेऽवचः ॥ ४१ ॥

பாபோத்பாத—விமோசனுய ருசிரைச்வர்யாய ம்ருத்யுஞ்ஜய
ஸ்தோத்ரத்யான நதி-ப்ரதக்ஷிண-ஸபர்யாலோகனுகர்ணனே |

ஜிஹ்வா சித்த-சிரோங்க்ரி-ஹஸ்த-நயன ச்ரோத்ரை-ரஹம் ப்ரார்த்திதோ
மாமாஜ்ஞாபய தந்நிருபய முஹுர்-மாமேவ மா மே/வச:

ஹே ம்ருத்யுஞ்ஜய! நான் செய்த பாபங்கள் அனைத்தும் அழிந்து ஸர்வ ஐச்வர்யங்களையும் அடைய வேண்டுமென எனது அங்க அவயவங்கள் யாவும் என்னை வேண்டுகின்றன. கோயில்களுக்குச் சென்று உனது திவ்ய மங்கள விக்ரஹத்தை தர்சிக்க எனது கண்கள் ஏங்குகின்றன, திவ்ய பரிமள புஷ்பங்களை உனக்கு அர்ச்சிக்க எனது இரு கரங்களும் துடிக்கின்றன. உனது நாமாவை கீர்த்தனம் செய்ய என்னிடம் வேண்டுகிறது எனது நாக்கு. உனது அம்ருதமயமான திவ்யசரித்திரத்தைக் கேட்க என் காதுகள் விரும்புகின்றன. எனது தலை உன்னை நமஸ்கரிக்க என்னிடம் ப்ரார்த்திக்கிறது. உன்னையே த்யானம் செய்ய எனது மனம் என்னைக் கேட்கிறது. இந்த அவயவங்களின் விருப்பத்தை நிறைவேற்ற நீ உத்தரவு தந்துஅருள்புரிக. ஸ்தோத்ரம் பாராயாணம் த்யானம் பூஜை இவைகளில் உன்னை அடிக்கடி நான் உணரும்படி அருள்புரி. உன்னை பார்க்காமல் ஸ்துதிக்காமல் பூஜிக்காமல், நமஸ்கரிக்காமல் இருக்கின்ற நிலை எனக்கு ஒரு பொழுதும் வேண்டாம்.

गांभीर्यं परिखापदं घनधृतिः प्राकारउद्यद्गुण-
स्तोमश्चाप्तबलं घनेन्द्रियचयो द्वाराणि देहे स्थितः।
विद्यावस्तुसमृद्धिरित्यखिलसामग्रीसमेते सदा
दुर्गातिप्रिय देव मामकमनो दुर्गेनिवासं कुरु ॥ ४२ ॥

காம்பீர்யம் பரிகாபதம் கனத்ருதி: ப்ராகார உத்யத்-குண
ஸ்தோமச்சாப்தபலம் கனேந்த்ரியசயோ த்வாராணி தேஹே ஸ்த்தித:

**வித்யாவஸ்து-ஸம்ருத்திரித்யகிலஸாமக்ரீ ஸமேதே ஸதா**
**துர்க்காதிப்ரிய தேவ மாமகமனோதுர்க்கே நிவாஸம் குரு ||42||**

யாரும் நுழைய முடியாத மலை கோட்டையில் வஸிப்பதில் மிக்க விருப்பமுடைய ஹே தேவ! எனது மனம் என்ற மிக்க பலம் வாய்ந்த கோட்டையில் வந்து வீற்றிருக்க வேண்டுகிறேன். என் மனது மிக ஆழமானது. அதன் ஆழத்தை காண முடியாது. கோட்டையைச் சுற்றிலும் அகழி எவ்விதமோ அது போல என் மனம். உறுதியான தைர்யம் தான் இதன் மதில்கள். நுழைவாயில்கள் எனது கண் மூக்கு முதலிய இந்திரியங்களே. சிவஞானத்தை போதிக்கின்ற அதிசயமான விலை மதிக்க முடியாத வித்யை என்ற ஸம்பத்து இக்கோட்டையில் பாதுகாக்கப் பட்டிருக்கிறது. இந்த ஸம்பத்தைக்காக்க மிகப் பலம் வாய்ந்த ஸேனையாக ஸத்குணங்களின் ஸமூஹங்கள் விளங்குகின்றன. இவ்விதம் ஸகலவிதமான ஸம்பத்துக்களும் நிறைந்திருக்கின்ற எனது மனம் என்ற கோட்டையில் எப்போதும் குடியேறி வீற்றிருப்பாயாக.

**मा गच्छ त्वमितस्ततो गिरिश भो मय्येव वासं कुरु**
**स्वामिन्नादिकिरात मामकमनःकान्तारसीमान्तरे ।**
**वर्तन्ते बहुशो मृगा मदजुषो मात्सर्य मोहादय-**
**स्तान् हत्वा मृगया-विनोद रुचितालाभं च संप्राप्स्यसि ॥**

**மா கச்ச த்வமிதஸ்ததோ கிரிச போ மய்யேவ வாஸம் குரு**
**ஸ்வாமின்னாதிகிராத மாமகமன:காந்தாரஸீமாந்தரே |**
**வர்த்தந்தே பஹுசோ ம்ருகா மதஜுஷோ மாத்ஸர்யமோஹா-தய:**
**தான் ஹத்வா ம்ருகயா-விநோத-ருசிதாலாபஞ்ச ஸம்ப்ராப்-ஸ்யஸி || 43 ||**

மலையில் வாழ்கின்ற ஹே ஈசா! உலகில் முதன்முதலில் வேடனாக தோன்றியவன் நீ. ஆகையினாலேதான் நீ மலையில் வீற்றிருக்கிறாய். ஹே ஸ்வாமின்! எனது மனம் ஒரு பெருங் காடு. அக்காட்டின் எல்லைக்குள்ளே அநேக ம்ருகங்கள் திமிர்பிடித்து கொழுத்து திரிகின்றன. காமம், க்ரோதம், மோஹம், லோபம், மதம், மாத்ஸர்யம், அஹங்காரம் முதலியவைகள் தான் அக்கொடிய மிருகங்கள். எனது மனமாகிற காட்டில் இவைகள் யதேச்சையாக சுற்றியலை கின்றன. இவைகளைத் தவிர ஏராளமான துர்குணங்கள் என்ற கொடிய விலங்குகளும் இக்காட்டில் வாழ்கின்றன. நீ இவைகளை வேட்டையாடிக் கொன்று மகிழலாம் அதனால் உண்டாகும் இன்பத்தை அனுபவிக்க, எனது மனதில் வந்து குடியிருந்து உனது விருப்பத்தை பெறு.

करलग्नमृगः करीन्द्रभंगो
घनशार्दूल-विखण्डनोऽस्त-जन्तुः ।
गिरिशो विशदाकृतिश्च चेतः कुहरे
पञ्चमुखोस्ति मे कुतो भीः ॥ ४४ ॥

கரலக்னம்ருக: கரீந்த்ர-பங்கோ
கனசார்த்தூல விகண்டனோ*f*ஸ்தஜந்து: ।
கிரிசோ விசதாக்ருதிச்ச சேத: குஹரே
பஞ்சமுகோஸ்தி மே குதோ பீ: ॥ 44 ॥

ஐந்து முகங்களையுடைய ஹே கிரிச! ஜந்துக்களில் சிறந்தது ஸிம்ஹம். தைவங்களின் ஸமூஹத்தில் நீ ஸிம்ஹமாக விளங்குகிறாய். உனக்கும் ஸிம்ஹத்திற்கும் ஒற்றுமை ஏராளமாக இருக்கின்றன. எப்படி எனில் உனக்கு ஐந்து முகங்கள் இருக்கின்றன. ஸிம்ஹத்திற்கு பஞ்சாஸ்ய: என்று ஸம்ஸ்க்ருதத்தில் சொல்வதுண்டு. நீ உனது திருக்கரத்தில் மானை ஏந்தினவனாக ப்ரகாசிக்கிறாய்.

ஸிம்ஹம் மானைக் கொன்று அதை வைத்தவண்ணம் இருக்கிறது. அதே ஸிம்ஹம் மத்த கஜங்களைக் கொல்கிறது. நீயோ கஜாஸுரனைக் கொன்றவன். மிக்க பலம் வாய்ந்த வ்யாக்ராஸுரனையும் அழித்தவன் நீ. அதே போல ஸிம்ஹமும் பலமுள்ள புலிகளைக் கொல்கின்றது மற்ற மிருகங்களை அது தூரத்தில் துரத்தியடித்துக் கொண்டிருக்கிறது. ப்ராணிகள்யாவும் உன்னிடம் லயத்தையடைகின்றன. ஆக விரட்டப்பட்ட ப்ராணிகளோடு ஸிம்ஹம் இருப்பதினாலும் லயத்தை அடைகின்ற ப்ராணிகளோடு நீ ப்ரகாசிப்பதினாலும்நீங்கள் இருவரும் ஸ்வச்சமான உருவத்தையுடையவர்களாக இருப்பதினாலும் உங்களுக்குள் வேற்றுமையே இல்லை. நீ ஸிம்ஹமே தான். அப்படிபட்ட ஸிம்ஹமான நீ எனது மனக்குகையில் வீற்றிருக்குங்கால் எனக்கு பயம் ஏது? நான் ஏன் பயப்பட வேண்டும்.

छन्दश्शाखि-शिखान्वितैर्द्विजवरैः संसेविते शाश्वते
सौख्यापादिनि खेदभेदिनि सुधासारैः फलैर्दीपिते ।
चेतःपक्षिशिखामणे त्यज वृथा संचारमन्यैरलं
नित्यं शङ्करपादपद्मयुगलीनीडे विहारं कुरु ॥ ४५ ॥

**சந்த: சாகி-சிகான்விதைர் த்விஜவரை: ஸம்ஸேவிதே**
**சாச்வதே**
**ஸௌக்யாபாதினி கேத-பேதினி ஸுதாஸாரை: பலைர்தீபிதே ।**
**சேத: பக்ஷிசிகாமணே த்யஜ வ்ருதா ஸஞ்சாரமன்யைரலம்**
**நித்யம் சங்கரபாதபத்மயுகளீ நீடே விஹாரம் குரு ॥ 45 ॥**

பறந்து திரிகின்ற சிறந்த பறவையான ஹே மனமே.! நீ வீணாகப் பறந்து அலையாதே. வீணாகத் திரிவதை விட்டு விட்டு. ஸ்ரீ பரமேச்வரனுடைய தாமரைத் திருவடிகளை

யடை. அதுவே உனக்கு புகலிடம். அதுவே உனது கூடு. பரமேச்வரனின் பாதங்கள் என்ற அந்தக் கூட்டின் மஹிமையே மஹிமை. வேதம் உபநிடதங்கள் என்பது பல கிளைகளையுடைய ஒரு பெரிய மரம். அம்மரமானது சிறந்த ப்ராஹ்மணர்களால் சாச்வதமாக ஆச்ரயிக்கப்பட்டும், ஸகல ஸௌக்யங்களை கொடுப்பதும், ஸம்ஸார துக்கத்தை உடைத்தெறிந்து அகற்றக் கூடியதாகவும் அம்ருதத்தையே பிழிந்து எடுத்த ரஸத்தாலான பழங்களுடனும் சுடர் விட்டு ப்ரகாசித்துக் கொண்டுமிருக்கிற அத்திருத் தாமரை யிணையடிகளை உனது கூடாக கொண்டு ஏ மனமே நீ எப்போதும் சாச்வதமாக விளையாடு. மற்ற தைவங்களை தேடியலைவதை விட்டுவிடு.

आकीर्णे नखराजिकान्तिविभवैरुद्यत्सुधावैभवै-
राधौतेपि च पद्मरागललिते हंसव्रजैराश्रिते ।
नित्यं भक्तिवधूगणैश्च रहसि स्वेच्छाविहारं कुरु
स्थित्वा मानसराजहंस गिरिजानाथाङ्घ्रिसौधान्तरे ॥

**ஆகீர்ணே நகராஜிகாந்திவிபவைருத்யத்ஸுதா-வைபவை-**
**ராதௌதேபி ச பத்மராகலலிதே ஹம்ஸவ்ரஜைராச்ரிதே ।**
**நித்யம் பக்திவதூகணைச்ச ரஹஸி ஸ்வேச்சா விஹாரம் குரு,**
**ஸ்தித்வா மானஸ ராஜஹம்ஸ கிரிஜாநாதாங்க்ரிஸௌதாந்தரே**

மனமென்னும் ஹே ராஜ ஹம்ஸமே! மஹாதேவனுடைய பாதாரவிந்தங்களையடைந்து அவைகளை ஸேவிப்பது என்பது தன் ப்ரியதமையான பத்னீஸங்கமத்தால் உண்டாகின்ற சுகத்தை ஒத்ததேயாகும். ஏனெனில் அந்த பர்வதராஜ புத்ரியான பார்வதிபதியின் இரு பாதங்களும் ஒரு மாளிகைபோல ப்ரகாசிக்கிறது. இம்மாளிகையானது மிகவும் அழகாக இருக்கிறது. பரமேச்வரனின் கால் விரல்

ககங்களின் சோபை இம்மாளிகையில் எங்கும் பரவி மாளிகைக்கு மேலும் அழகையூட்டுகிறது. பரமேச்வரன் தன் தலையில் சந்த்ரக்கலையை சூடியிருக்கிறான். அதிலிருந்து அம்ருதமயமான கிரணங்கள் பரமேச்வரனது சரணங்களாகிற மாளிகையில் பட்டு எங்கும் வெள்ளை வெளேரென வெண்மையாக சுண்ணும்பு பூசப்பட்டது போல ப்ரகாசிக்கிறது. மேலும் செந்தாமரை மலரைப் போல செக்கச் சிவந்த பத்மராகக் கற்களால் இழைக்கப் பட்டது போலவும் இம்மாளிகை ஒளி விட்டு ப்ரகாசிக்கிறது. இம்மாளிகையில் ஓர் வகை ஹம்ஸ பறவைகளின் கூட்டம் வாஸம் செய்கின்றன. "ஸோஹம் ஹம்ஸ: ஹம்ஸ: ஸோஹம்" என சதா ஜபித்து ஜபித்து பரமஹம்ஸ பதவியை எய்திய முனிவர்களின் கூட்டம் தான் அப் பறவைகள். இப்பரமஹம்ஸ பறவைகளால் ஆச்ரயிக்கப் பட்ட பரமேச்வரனின் சரணாரவிந்தங்களாகிற இம் மாட மாளிகையில் பக்தி என்ற இளம் பெண் ஸமூஹங்களுடன் ஹே மனமே, நீ ரஹஸ்யமாக குடியிருந்து கொண்டு உன் விருப்பம் போல் விளையாடு.

शम्भुध्यानवसन्तसंगिनि हृदारामेऽघजीर्णच्छदाः
स्रस्ता भक्तिलताच्छटा विलसिताः पुण्यप्रवालश्रिताः ।
दीप्यन्ते गुणकोरका जपवचः पुष्पाणि सद्वासना
ज्ञानानन्दसुधामरन्दलहरीसंवित्फलाभ्युन्नतिः ॥

சம்புத்யான-வஸந்த ஸங்கினி ஹ்ருதாராமே/கஜீர்ணச்சதா:
ஸ்ரஸ்தா பக்திலதாச்சடா விலஸிதா: புண்யப்ரவாலச்ரிதா: ।
தீப்யந்தே குண கோரகா ஜப வச: புஷ்பாணி ஸத்வாஸனா
ஜ்ஞானனந்த ஸுதாமரந்தலஹரீ ஸம்வித்பலா/பிலாப்யுந்நதி: ॥

மனம் என்பது ஒரு உத்யானவனம். ஸ்ரீ பரமேச்வர த்யானமானது வஸந்தகாலம். வஸந்த காலமென்னும் பர

மேச்வர த்யானத்தால் உத்யானவனமாகிய மனத்தில் பாபங்களாகிய பழைய இலைகள் உதிர்ந்து விழுந்து விடுகின்றன. பிறகு நற்செய்கைகள் (புண்யங்கள்) என்ற தளிர்கள் இப் பூந்தோட்டத்தில் தோன்றுகின்றன. பக்தி என்ற கொடிகளின் கூட்டங்கள் உற்பத்தியாகி அக்கொடிகளில் ஸத்குணங்கள் என்ற அரும்புகள் உண்டாகின்றன. இவ்வரும்புகள் பரமேச்வர நாம ஜபங்கள் என்ற பூக்களாக மலர்ந்து ப்ரகாசிச்கின்றன. இப்பூக்களுடைய நறுமணம் தான் ஸத்கர்மாக்கள். அறிவு, ஆனந்தம், அம்ருதம் இவை இம்மலர்களில் வழிகின்ற புஷ்பரஸம். பழுத்து குலுங்குகின்ற இப்பூக்களில் கிடைப்பதற்கரிய பழங்கள் ப்ரஹ்ம ஞானம் என்பது தான். இப்படிபட்ட மனமாகிய பூந்தோட்டம் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது.

नित्यानन्दरसालयं सुरमुनिस्वान्तांबुजाताश्रयं
स्वच्छं सद्द्विज सेवितं कलुषहृत् सद्वासनाविष्कृतम् ।
शंभुध्यानसरोवरं व्रज मनोहंसावतंसस्थिरं
किं क्षुद्राश्रयपल्वल-भ्रमण- संजातश्रमं प्राप्स्यसि ॥

நித்யானந்த-ரஸாலயம் ஸுர முனிஸ்வாந்தாம்பு ஜாதாச்ரயம்
ஸ்வச்சம் ஸத்-த்விஜஸேவிதம் கலுஷ ஹ்ருத் ஸத்வாஸனா-
விஷ்க்ருதம் |
சம்புத்யான-ஸரோவரம் வ்ரஜ மனோ ஹம்ஸாவதம்ஸ ஸ்த்திரம்
கிம் க்ஷுத்திராச்ரய-பல்வல-ப்ரமணஸஞ்ஜாதச்ரமம் ப்ராப்-
ஸ்யஸி || 48 ||

மனமென்னும் ஹே சிறந்த ராஜஹம்ஸமே! ஸேவிப்பதற்கு ஸர்வ வல்லமையுடைய பரமேச்வரன் இருக்க மற்ற அற்ப தேவதைகளை நீ ஏனோ ஸேவித்துழலுகிறாய். அற்ப தேவதைகளை ஸேவிப்பதால் நீ செய்த பாபங்கள்

கழுவப்பட்டாலும் நித்யாநந்தகரமான மோக்ஷஸாம் ராஜ்யத்தை அளிக்கும் மகிமை அத்தேவதைகளுக்கு இல்லையே. சிறந்த அன்னப்பறவை போலிருக்கின்ற உனக்கு ஸ்ரீ பரமேச்வரத்யானம் என்ற அதி அற்புதமான தும் அழியாத ஆநந்தம் என்னும் ரஸம் நிரம்பியதுமான ஸரோவரம் இருக்க குளம், குட்டைக்கு ஸமமாக இருக்கின்ற தேவதைகளை ஸேவித்து, சுற்றியலைந்து ஏனோ நீ கஷ்டப்படுகிறாய். மஹாதபஸ்விகளான முனிவர்களுடையதும் தேவர்களுடையதும் மனமாகிற தாமரை மலர்கள் மலர்ந்தும், ஸ்படிகம் போல் நிர்மலமானதாகவும் இந்த ஸரோவரம் விளங்குகிறது. கர்மானுஷ்டான நிஷ்டர்களான சிறந்த ப்ரஹ்ம ஞானிகள் என்ற ஹம்ஸபக்ஷிகள் விஹரிக்கின்ற இவ்வற்புத ஸரோவரத்தை ஆச்ரயிப்பதால் மும்மலங்கள் விலகுகின்றன. மேலும் இது நல்ல நல்ல ஸம்ஸ்காரங்களை உண்டுபண்ணுகிறது. நறுமணம் உள்ளதாயும் இருக்கிறது. என்றும் அழியாதது இந்த ஸரோவரமே ஆகையால் ஹே மனமே! ஸகலவிதமான பலன்களையும் அளிக்க கூடிய ஸ்ரீ பரமேச்வரத்யானமே சிறந்தது. அதையே நீ செய். அவரே உனக்கு புகலிடம்.

आनन्दामृत-पूरिता हरपदांभोजालवालोद्यता
स्थैर्योपघ्नमुपेत्य भक्तिलतिका शाखोपशाखान्विता ।
उच्चैर्मानसकायमानपटलीमाक्रम्य निष्कल्मषा
नित्याभीष्ट-फलप्रदा भवतु मे सत्कर्मसंवर्धिता ॥

ஆனந்தாம்ருதபூரிதா ஹரபதாம்போஜாலவாலோத்யதா
ஸ்தைர்யோபக்னமுபேத்ய பக்திலதிகா சாகோபசாகான்விதா ।
உச்சைர்மானஸகாய மான படலீமாக்ரம்ய நிஷ்கல்மஷா
நித்யாபீஷ்ட-பலப்ரதா பவது மே ஸத்கர்ம ஸம்வர்த்திதா ॥

பக்தி என்ற கொடி வளர்க்கப்படுகிறது. பரமேச்வரனுடைய திருவடித்தாமரையே இக்கொடியை நடுவதற்கு பாத்தி. பக்தி என்ற கொடி இதில் முளைத்து உயரே கிளம்புகிறது. தைர்யம் என்பது தான் இக்கொடி பற்றிக்கொண்டு உயரே கிளம்புவதற்கான தாங்கு கோல். இதைத் தழுவிக் கொண்டு, மனதில் உதிக்கின்ற உயர்ந்த எண்ணங்கள் என்ற பந்தலில், இது படர்கிறது. பெரிதும் சிறிதுமான கிளைகளுடன் இக்கொடி படர்ந்து விடுகிறது. கொடிகளை நாசம் செய்கின்ற புழு, பூச்சி முதலியவைகள் அரித்து விடாமல் எவ்விதக் குற்றமுமற்றதாய் பக்திக் கொடிவளர்ந்து கொண்டேயிருக்கிறது. இது வளர்வதற்காக ஆனந்தம் என்ற ஜலம் இதன் பாத்தியில் நிரப்பப்படுகிறது. முற்பிறவியில் செய்த புண்யகர்மாக்கள் என்ற உரமிட்டு இக்கொடியானது மிக்க செழிப்புடன் வளர்ந்து வருகிறது. அப்படிப்பட்ட பக்தி என்ற இக்கொடி நான் விருப்புவதையெல்லாம் எனக்கு அளிக்க கூடியதாக ஆகட்டும்,

सन्ध्यारंभ विजृंभितं श्रुतिशिरस्थानान्तराधिष्ठितं
सप्रेमभ्रमराभिराममसकृत् सद्वासनाशोभितम् ।
भोगीन्द्राभरणं समस्तसुमनः पूज्यं गुणाविष्कृतं
सेवे श्रीगिरिमल्लिकार्जुनमहालिंगं शिवालिंगितम् ॥

ஸந்த்யாரம்ப–விஜ்ரும்பிதம் ச்ருதிசிரஸ்த்தானந்தராதிஷ்டிதம்
ஸப்ரேம–ப்ரமராபிராம–மஸக்ருத் ஸத்வாஸனுசோபிதம் |
போகீந்த்ராபரணம் ஸமஸ்தஸுமன: பூஜ்யம் குணுவிஷ்க்ருதம்
ஸேவே ஸ்ரீகிரிமல்லிகார்ஜுனமஹாலிங்கம் சிவாலிங்கிதம் ||

ஸ்ரீ சைலத்தில் ப்ரமராம்பிகையோடு மல்லிகார்ஜுன மஹாலிங்கமாக விளங்குகின்ற ஹே மல்லிகாஜுனேசவர!

உமக்கும் மல்லிகார்ஜுன வ்ருக்ஷத்திற்கும் உள்ள உவமையும் என்னே! ஒற்றுமையும் என்னே! மல்லிகார்ஜுன வ்ருக்ஷமானது ஸந்த்யா காலத்தில் புஷ்பங்கள் மலர்ந்து மிக அழகுடன் ப்ரகாசிக்கிறது. நீ அதே காலத்தில் பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்வதற்காக ஆனந்த நர்த்தனமாடி நடராஜனாக ப்ரகாசிக்கிறாய். அம்மரத்தில் பூக்கின்ற பூக்கள் தலையிலும் காதிலும் பக்தர்களால் வைத்துக் கொள்ளப்படுகின்ற மலரோடு கூடினதாக இருக்கிறது, நீ ச்ருதி ப்ரதிபாத்யனாய் உபநிஷத வேத்யனாய் விளங்குகிறாய். வண்டுகள் நறுமணம் வீசுகின்ற அம்மலரை அடிக்கடி மிக ஆசையுடன் சுற்றுவதாய் ப்ரகாசிக்கிறது. ப்ரமராம்பிகையால் மிக ப்ரேமையுடன் ஆலிங்கனம் செய்யப்பட்டவனாயும் ஸாதுக்களுடைய நல்ல பாவனையாலும் நீ சோபிக்கிறாய். காமாதி போகங்களை அனுபவிக்கின்றவர்களுக்கு அலங்காரமாய் மல்லிகார்ஜுனம் இருப்பது போல போகீந்த்ரனான வாசுகியே உமது அலங்கார ஆபரணமாக விளங்குகிறது. ஸகல தேவர்களாலும் பூஜிக்கப்படுகின்றவன் நீ. எல்லா புஷ்பங்களையும் விட மிக சிறந்த புஷ்பம் என்று மற்ற புஷ்பங்களால் கொண்டாடப்பட்டு உலகில் மிக சிறந்த புஷ்பமாக விளங்குகிறதுஅது. ஸ்ரீசைல புண்ய க்ஷேத்ரத்தில் மல்லிகையால் சுற்றப்பட்டு வ்ருக்ஷ ரூபியாய் ஸ்ரீ ப்ரமராம்பிகா ஸமேதராய் இருக்கின்ற ஸ்ரீசைல மல்லிகார்ஜுனலிங்கம் என்ற உன்னை ஸேவிக்கிறேன்.

भृंगीच्छानटनोत्कटः करिमदग्राही स्फुरन्माधवा-
ह्लादो नादयुतो महासितवपुः पंचेषुणा चादृतः ।
सत्पक्षस्सुमनो वनेषु स पुनः साक्षान्मदीये मनो-
राजीवे भ्रमराधिपो विहरतां श्रीशैलवासी विभुः ॥

ப்ருங்கீச்சா-நடனோத்கட: கரிமதக்ராஹீ ஸ்புரன் மாதவா-
ஹ்லாதோ நாதயுதோ மஹாஸிதவபு: பஞ்சேஷுணா சாத்ருத: ।

**ஸத்பக்ஷஸ்-ஸுமனோவனேஷு ஸ புன: ஸாக்ஷான்மதீயே மனோ ராஜீவே ப்ரமராதிபோ விஹரதாம் ஸ்ரீசைலவாஸீ விபு: || 51 ||**

[ப்ருங்கீ, மஹாஸித:, ஸுமனோவனேஷு, கரிமதக்ராஹீ, ஸ்புரன்மாதவாஹ்லாத, பஞ்சேஷுஞ்சாத்ருத:, இச்சொற்கள் யாவும் இருபொருள்படுகின்ற சொற்களாகும். ஒரு பொருள் வண்டைக் குறிக்கிறது. மற்றொன்று பரமேச்வரனை குறிக்கிறது. பகவத் பாதர்கள் தனது மனதை தாமரை மலராகவும் ஸ்ரீ சைல வாஸியான, ப்ரமராம்பிகை ஸமேதரான பரமேச்வரனை ஒரு வண்டாகவும் கருதி சிலேடையாக ஸ்தோத்ரம் செய்கிறார்.]

வண்டு பெண்வண்டின் இச்சைப்படி வாழ்வதில் ஆசையுடையது. அது போல ஸ்ரீ பரமேச்வரன் ப்ருங்கீ என்ற தனது பக்தரான முனிவரின் இச்சைப்படி நடனமாடுவதில் மிகவும் ஸந்தோஷமுடையவராக ப்ரகாசிக்கின்றார். வண்டு கொழுத்த யானையின் மத ஜலத்தை பருகுகிறது. அது போல ஸ்ரீ பரமேச்வரன் கஜாசுரன் என்ற அரக்கனின் கொழுப்பைப் (மதத்தை) போக்கடித்தவர். வஸந்த காலத்தில் வண்டிற்கு மிக மோஹம் உண்டு. அதுபோல மாதவனான ஸ்ரீ மஹாவிஷ்ணு மோஹினியாக உருவெடுத்த தருணத்தில் ஸ்ரீ பரமேச்வரன் அவரை மோஹித்தவர். வண்டு ரீங்காரம் செய்கின்றது. பரமேச்வரனே ஓம் என்ற ப்ரணவநாத ப்ரம்மமாக விளங்குகிறார். வண்டு காடு மலை முதலிய இடங்களில் சுற்றிச் சுற்றி வருகிறது. அது எங்கும் சஞ்சாரம் செய்கிறது. ஸ்வாமி எங்கும் நிறைந்திருக்கிறார். வண்டு மன்மதனுக்கு உதவி செய்வதினால் அவன் அதை ஆதரிக்கிறான். பரமேச்வரனை தன் பாணத்திற்கு இலக்காக செய்து ஆதரித்தவனும் அவனே. ஆதலால் அவனால் ஆதரிக்கப்பட்டவராகிறார் ஸ்வாமி. புஷ்பங்கள் எப்பக்கமோ அப்பக்கத்தை நோக்கி செல்கிறது வண்டு. வெண்மையான உடலையுடைய ஸ்ரீ பரமேச்வரன் தேவர்களைக் காப்பதிலேயே

அபிமானமுள்ளவராக இருக்கிறுர். கருத்த உடலையுடைய வண்டின் இறக்கைகள் மிகவும் அழகுடன் ப்ரகாசிக்கிறது. பகவான் ஸத்பக்ஷபாதியாக இருக்கிறுர். இவ்விதம் ஒரு வண்டாகவே தோற்றமளிக்கின்றவரும் ஸ்ரீ சைலத்தில் ப்ரமராம்பிகையின் அதிபதியுமான ஸ்ரீ பரமேச்வரன் என்ற வண்டு எனது மனமாகிற தாமரை மலரில் வந்திருந்து களிப்புடன் விளையாடட்டும்.

कारुण्यामृतवर्षिणं घनविपद्ग्रीष्मच्छिदाकर्मठं
विद्यासस्यफलोदयाय सुमनस्संसेव्यमिच्छाकृतिम् ।
नृत्यद्भक्तमयूरमद्रिनिलयं चञ्चज्जटामण्डलं
शंभो वांछति नीलकन्धर सदा त्वां मे मनश्चातकः ॥

**காருண்யாம்ருதவர்ஷிணம் கனவிபத்க்ரீஷ்மச்சிதாகர்மடம்**
**வித்யாஸஸ்ய-பலோதயாய ஸுமனஸ்ஸம்ஸேவ்யமிச்சா**
**க்ருதிம்।**
**ந்ருத்யத்பக்தமயூரமத்ரிநிலயம் சஞ்சஜ்ஜடா-மண்டலம்**
**சம்போ வாஞ்சதி நீலகந்தர ஸதா த்வாம் மே மனச்சாதக: ||**

[பகவத்பாதர்கள் தன் மனத்தை ஒரு சாதக பக்ஷியாகக் கருதி ஸ்வாமியை மேகமாகவே வர்ணிக்கிறுர். இந்த ச்லோகத்திலும் இருபொருள் படுகின்ற சொற்களைக் கொண்டே ஸ்தோத்ரம் செய்கிறுர்]

நீருண்ட மேகம்போல் கருணைமழையைப் பொழிகின்ற ஹே நீலகண்டா! ஹே சம்போ! சாதக பக்ஷியானது மேகம் மழையை பொழியாதா என்று காத்திருப்பது போல எனது மனமாகிய சாதக பக்ஷியானது ஸகல சுகங்களுக்கும் காரண பூதனுன உன்னுடைய கருணை என்ற அம்ருத மயமான மழை பொழியாதா என எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கிறது. கடுமையான வெய்யிலில் வாடி

வதங்கிய செடிகொடிகள், பயிர்கள், ஸஸ்யாதிகள் முதலியவைகளின் வெப்பத்தைத் தணித்து செழிப்புடன் வளரச் செய்கின்ற மேகம் எப்படியோ அப்படித்தான் நீ. விஷய சுகம் என்ற ஸம்ஸார துக்கமாகிற மஹத்தான தாபத்தைத் தணித்து அருள் பாலிப்பதில் வல்லமையுள்ளவன் நீ. நல்ல நல்ல பயிர்களை செழிப்புடன் வளர்த்து அதன் பலனையனுபவிப்பதற்கு குடியானவர்கள் மேகத்தையே எதிர்பார்த்து அந்த மழையைப் பொழியும்படி எப்படி வேண்டுகிறார்களோ அதுபோலவே வித்யை என்ற பயிரை வளர்த்து அப்பயிரின் பலனாக ப்ரஹ்மானந்தானுபவம் என்ற பழத்தை அடைய தேவர்களும், மெத்தப்படித்த அறிஞர்களும் உன்னை ஸேவிக்கிறார்கள். மேகம் உருவமற்றது. தன்னிஷ்டப்படி அமைகின்ற உருவத்தையுடையது. மலைகளின் உச்சியில் மேகம் ஸஞ்சரிக்கின்றது மயில்கள் மேகத்தைக்கண்டு களிப்புற்று ஆனந்த நடனம் புரிவதற்கு மேகமே காரணமாகிறது. மின்னல் கொடிகள் மேகத்தில் பளீர் பளீரென ப்ரகாசித்துக் கொண்டு அது அசைந்து அசைந்து செல்கிறது. ஹே சம்போ! நீயும் உன்னிஷ்டப்படியெல்லாம் உன் உருவத்தை அமைத்துக் கொள்கிறாய். ஆகையால் நீயும் அம் மேகத்திற்கு ஸமானமானவனே. உன்னைக் கண்டு பக்தர்களாகிய மயில் கூட்டங்கள் ஆனந்த நர்த்தனம் புரிகிறார்கள். மெள்ள மெள்ள அசைகின்ற உனது ஜடா முடி மின்னலைப் போல ப்ரகாசிக்கிறது. நீ மலையில் வஸிக்கிறவனாகவுமிருக்கிறாய். ஆகையால் நீ ஒரு மேகமே. எனது மனமாகிய சாதகம் எப்பொழுதும் உன்னை விரும்புகிறது.

आकाशेन शिखी समस्तफणिनां नेत्रा कलापी नता-
ऽनुग्राहिप्रणवोपदेशनिनदैः केकीति यो गीयते ।
श्यामां शैलसमुद्भवां घनरुचिं दृष्ट्वा नटन्तं मुदा
वेदान्तोपवने विहाररसिकं तं नीलकण्ठं भजे ॥ ५३ ॥

**ஆகாசேன சிகீ ஸமஸ்தபணிநும் நேத்ரா கலாபீ நதா-**
**஽நுக்ராஹிப்ரணவோபதேச-நினதை: கேகீதி யோ கீயதே ।**
**ச்யாமாம் சைலஸமுத்பவாம் கனருசிம் த்ருஷ்ட்வா நடந்தம்**
**முதா**
**வேதாந்தோபவனே விஹார-ரஸிகம் தம் நீலகண்டம் பஜே ॥**

பலவகையில் மயிலை ஒத்திருக்கின்ற நீலகண்டனை நான் நமஸ்கரிக்கிறேன். மயிலின் கழுத்து நீல நிறமாகவும் அதன் தலையில் கொண்டை இருப்பதால் சிகியாகவும், தோகையையுடையதாகையால் கலாபியாகவும் அது சொல்லப்படுகிறது. ஸ்ரீ பரமேச்வரனின் கழுத்தும் நீலமாக இருக்கிறது. ஆகையால் அவன் நீலகண்டன். வ்யோம கேசாய ச, என ஸ்ரீ ருத்ரத்தில் சொன்ன படி அவனது கேசம் ஆகாயமேயாகும். ஆகையால் சிகீ எனச் சொல்வதும் பொருந்தும். ஸகல ஸர்ப்பங்களுக்கும் அதிபதியான ஆதிசேஷனை ஆபரணமாக அணிந்திருக்கின்ற படியால் ஸ்ரீ பரமேச்வரனும் கலாபீ எனப்படுகிறான். மயிலானது மலைப்ரதேசங்களில் உற்பத்தியாகி நீருண்ட மேகங்களைக் கண்டு ஆனந்தமடைந்து, உத்யானவனத்தில் கேகீ என ஒலியை எழுப்பிக்கொண்டு நாட்டியமாடுவதில் மிக்க மகிழ்ச்சியையுடையது. ஸ்ரீ பரமேச்வரன் அவனை வணங்குகின்ற அடியார்களுக்கு ப்ரணவத்தை அதாவது ஓம் என்ற சப்த நாதத்தை அனுக்கிரஹிப்பவனாய் அதை பாடிக் கொண்டு, கருத்த மேனியையுடையவளும் ஹிமவானுக்கு மகளாக அவதரித்தவளுமான உமையவளைப் பார்த்து உள்ளத்தில் ஆனந்தம் பெருகி உபநிடதங்கள் என்ற ரம்யமான பூங்காவனத்தில் விளையாடுவதில் மகிழ்ச்சியையுடையவரே. அப்படிப்பட்ட அந்த நீலகண்டன் என்ற மயிலாகிற பரமேச்வரனை நான் பஜிக்கிறேன்.

**सन्ध्या घर्मदिनात्ययो हरिकराघातप्रभूतानक-**
**ध्वानो वारिदगर्जितं दिविषदां दृष्टिच्छटा चञ्चला ।**

भक्तानां परितोषबाष्पविततिर्वृष्टिर्मयूरी शिवा
यस्मिन्नुज्ज्वलताण्डवं विजयते तं नीलकण्ठं भजे ॥५४॥

ஸந்த்யா கர்மதிளுத்யயோ ஹரிகராகாத ப்ரபூதானக-
த்வானோ வாரிதகர்ஜிதம் திவிஷதாம் த்ருஷ்டிச்சடா சஞ்சலா
பக்தானும் பரிதோஷபாஷ்ப-விததிர் வ்ருஷ்டிர்மயூரீ 'சிவா
யஸ்மின்னுஜ்வலதாண்டவம் விஜயதே தம் நீலகண்டம் பஜே ||

ஸ்ரீ பார்வதீபரமேச்வரர்களாகிய மயில்களுக்கு ஸாயங்கால வேளை என்பது கோடைகாலம் முடிவுற்று பிறகு மழைகாலம் ஆரம்பம் எதுவோ அதுதானே, மஹா விஷ்ணுவின் இருகரங்களால் அடிக்கப்பட்டு ஆனகம் என்ற வாத்தியத்திலிருந்து எழும்புகின்ற இனிய நாதம் தான் மேகங்களின் கர்ஜனையோ, தேவலோக வாஸிகளான தேவர்களின் கண்களின் ஸமூஹம்தான் மேகங்களில் தோன்றுகின்ற மின்னலோ, பக்த ச்ரேஷ்டர்களின் கண்களிலிருந்து பொழிகின்ற அந்த ஆனந்தக் கண்ணீர் தான் மழையோ, பார்வதி தான் பெண் மயிலோ, எந்த பரமேச்வரனிடத்தில் மிக சிறந்த அழகான தாண்டவநடனம் மிக வெற்றியுடன் ப்ரகாசிக்கின்றதோ அப்படிப்பட்ட அந்த நீலகண்டனுகிய மயிலை நான் பஜிக்கிறேன்.

आद्यायामिततेजसे श्रुतिपदैर्वेद्याय साध्याय ते
विद्यानन्दमयात्मने त्रिजगतस्संरक्षणोद्योगिने ।
ध्येयायाखिलयोगिभिस्सुरगणैर्गेयाय मायाविने
सम्यक् ताण्डवसंभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ॥

ஆத்யாயாமித-தேஜஸே ச்ருதிபதைர்வேத்யாய ஸாத்யாய தே
வித்யானந்த-மயாத்மனே த்ரிஜகதஸ்ஸம்ரக்ஷணோத்யோகினே|

**த்யேயாயாகில-யோகிபி: ஸுரகணைர்கேயாய மாயாவினே**
**ஸம்யக் தாண்டவஸம்ப்ரமாய ஜடினே ஸேயம் நதி: சம்பவே ||**

உலகங்கள் யாவும் உற்பத்தியாவதற்கு முன்னமேயே நித்யமாய் இருக்கின்றவரும், இவ்வளவு என அளவிட்டு சொல்ல இயலாதபடி ஜோதிமயமாய் ஜ்வலிப்பவரும், வேத வாக்யங்களால் மட்டுமே அறியப்படுகின்றவரும் பக்தர்களால் பல விதமாய் புகழப்படுகின்ற தனது பக்தர்களுக்கு அனுக்ரஹித்து அருள் புரிவதற்காகவே அர்ச்சாரூபமாய் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருப்பவரும், சிதானந்தமயனாய் ஆத்மஸ்வருபியாய் இருப்பவரும், மூவுலகங்களையும் காப்பதையே தனது முக்யதொழிலாககொண்டு அதில் முனைந்த ப்ரவ்ருத்தியையுடையவரும், அகில உலகங்களிலும் வாழ்கின்ற யோகிகளின் த்யானம் ஒன்றிற்கே விளங்கிக் கொண்டிருப்பவரும், வானுலகத்தில் வாழ்கின்ற ஸமஸ்தமான தேவகணங்களால் ஸ்துதி செய்து பாடத் தகுதி பெற்றவரும், நித்ய சக்தியோகமான சிச்சக்தியின் வடிவமான மாயையை தனக்கு அதீனமாக்கி வைத்திருப்பவரும், தனக்கு நிகரில்லாதவாறு மிக வேகமாகவும், கச்சிதமாகவும் நர்த்தனம் ஆடுவதில் சிறந்து விளங்கிக் கொண்டிருக்கின்றவருமான அந்த ஜடாதாரிக்கு, ஸகல சுகங்களுக்கும் மூலகாரணனாய் ப்ரகாசிக்கின்ற அந்தப் பரமேச்வரனுக்கு எந்தப் பெரியோர்களை உத்தேசித்து என்னால் நமஸ்காரமானது செய்யப்படுகின்றதோ, அந்த இந்த என்னுடைய நமஸ்காரமானது இருக்கட்டும்.

**नित्याय त्रिगुणात्मने पुरजिते कात्यायनीश्रेयसे**
**सत्यायादिकुटुंबिने मुनिमनः प्रत्यक्षचिन्मूर्तये ।**
**मायासृष्टजगत्त्रयाय सकलाम्नायान्तसंचारिणे**
**सायं ताण्डवसंभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ॥ ५६ ॥**

**நித்யாய த்ரிகுணாத்மனே புரஜிதே காத்யாயனீ-ச்ரேயஸே**
**ஸத்யாயாதி குடும்பினே முனிமன: ப்ரத்யக்ஷசின்மூர்த்தயே |**
**மாயாஸ்ருஷ்டஜகத்-த்ரயாய ஸகலாம்நாயாந்த-ஸஞ்சாரிணே**
**ஸாயம் தாண்டவஸம்ப்ரமாய ஜடினே ஸேயம் நதி: சம்பவே ||**

எக்காலங்களிலும் நாசமற்று சாச்வதமாய் இருப்பவரும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் ஸ்வரூபமாய் விளங்குகின்ற ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களைத் தனது ஆத்மாவாக கொண்டவரும், உபநிடதங்களில் கூறப்பட்ட ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று புரங்களை வென்றவரும் அல்லது புராண ப்ரஸித்தமான முப்புரங்களை எரித்து வெற்றி கொண்டவரும், பர்வத புத்ரியாகப் பிறந்த பார்வதீ தேவியின் தவத்தின் பயனாய் சிறந்து ப்ரகாசிக்கின்றவரும், முக்காலங்களிலும் மாற்றமேதுமின்றி உண்மையே வடிவாக அமைந்தவரும், தனது பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காகவே முதன் முதலில் தான் குடும்பியாக ஆனவரும், முனிவர்களின் சுத்தமான மனத்தில் மட்டுமே புலப்படுகின்ற "சித்" என்ற சக்தியை தன் சரீரமாய்க் கொண்டவரும், மாயையால் உண்டான மூவுலகங்களைத் தனதாகக் கொண்டவரும், எல்லா உபநிடதங்களினுடையவும் முடிவாய் சொல்லப்படுகின்றவரும், ஜடாபாரத்தை தரித்திருக்கின்றவரும், ஸாயங்கால வேளையில் மிக பரபரப்புடன் நர்த்தனம் ஆடுவதில் பேராவல் கொண்டவருமான ஸ்ரீ ஸாம்ப பரமேச்வரனை பலவிதமாகத் துதித்து யாரை நினைத்து நான் நமஸ்காரம் செய்கிறேனோ அப்படிப்பட்ட இந்த நமஸ்காரமானது மங்களஸ்வரூபியான சம்புவிற்கு இருக்கட்டும்,

नित्यं स्वोदरपूरणाय सकलानुद्दिश्य वित्ताशया
व्यर्थं पर्यटनं करोमि भवतस्सेवां न जाने विभो ।
मज्जन्मान्तर पुण्यपाकबलतस्त्वं शर्व सर्वान्तर-
स्तिष्ठस्येव हि तेन वा पशुपते ते रक्षणीयोऽस्म्यहम् ॥

**நித்யம் ஸ்வோதர பூரணாய ஸகலானுத்திச்ய வித்தாசயா**
**வ்யர்த்தம் பர்யடனம் கரோமி பவத: ஸேவாம் ந ஜானே விபோ |**
**மஜ்ஜன்மாந்தர புண்யபாகபலதஸ்த்வம் சர்வ ஸர்வாந்தரஸ்-**
**திஷ்டஸ்யேவ ஹி தேன வா பசுபதே தே ரக்ஷணீயோஸ்ம்யஹம்**

எங்கும் நிறைந்த ஹே விபோ! உனது ஸேவையை எவ்விதம் செய்ய வேண்டுமென்றதை அறியாதவனான நான் என் வயிற்றை நிரப்பி என்றோ ஒரு நாள் அழியக் கூடிய என்னுடலின் அங்கங்களை புஷ்டியுடன் வைத்திருப்பதற்காக பொருளை ஈட்ட வேண்டுமென்று பேராசைகொண்டு நல்லவர்கள் கெட்டவர்கள் என்று பகுத்தறிந்து பாராமல் எல்லா பணக்காரர்களையும் சுற்றி சுற்றி வீணாக அலைகிறேனே! ப்ரஹமா முதல்கொண்டு தூசு துரும்புகள் வரை ஸகல ஜீவராசிகளையும் பரிபாலித்து காப்பாற்றுகின்ற ஹே பசுபதே! பக்தர்கள் அறியாமல் செய்த பாபத்தை அழிப்பவனே! உன்னை எப்படி ஆராதிக்க வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. அப்படி இருப்பினும் முன் பிறவிகளில் நான் செய்த புண்யங்களின் பலத்தினாலும் ஸகல ப்ராணிகளுடையவும் இதயத்தில் நீ ஸூக்ஷ்மமாக ஊடுருவி இருப்பதினாலும் நான் உன்னால் காப்பாற்ற பட வேண்டியவனே.

**एको वारिजबान्धवः क्षितिनभोव्याप्तं तमोमण्डलं**
**भित्वा लोचनगोचरोपि भवति त्वं कोटिसूर्यप्रभः ।**
**वेद्यः किंन भवस्यहो घनतरं कीदृग्भवेन्मत्तम-**
**स्तत्सर्वं व्यपनीय मे पशुपते साक्षात् प्रसन्नो भव ॥**

**ஏகோ வாரிஜபாந்தவ: க்ஷிதிநபோவ்யாப்தம் தமோ-மண்டலம்**
**பித்வா லோசன-கோசரோபி பவதி த்வம் கோடிஸூர்யப்ரப: |**
**வேத்ய: கிம்ந பவஸ்யஹோ கனதரம் கீத்ருக்பவேன்மத்தமஸ்-**
**தத்ஸர்வம் வ்யபனீய மே பசுபதே ஸாக்ஷாத் ப்ரஸன்னோ பவ ||**

அறியாமை என்ற கூரிருட்டை அகற்றும் ஆற்றல் பெற்ற பேரொளிப்பிழம்பாக ப்ரகாசிக்கின்ற ஹே பசுபதே! நீரில் எழிலுடன் மலர்ந்திருக்கின்ற தாமரை மலரின் மணாளனாக வர்ணிக்கப்படுகின்ற சூரியன் ஒருவனே இப்புவியையும் வானத்தையும் கவ்விக் கொண்டிருக்கின்ற இருளின் குவியலை தன் பேரொளியால் பிளந்து தள்ளி ஸகல ப்ராணிகளுடையவும் கண்முன் காட்சி தருகிறானல்லவா. அவனைப்போல நீ ஏனோ காட்சி தருவதில்லை. நீயோவென்றால் இந்த சூரியனை போல கணக்கிட முடியாத அளவு கோடி சூரியர்களின் ஒளியையுடையவனாயிற்றே. நீ ஏன் எனக்கு புலப்படாதவனாகவே இருக்கிறாய். இது ஓர் பேராச்சரியமே. ஒரு வேளை எனது அறியாமை என்ற இருளானது எப்படிப்பட்டதோ! அந்த இருளைவிட இந்த இருள் மிக மிகப் பெரிதோ என்னமோ! எப்படி இருப்பினும் கோடி சூரியர்களுடைய ப்ரகாசத்திற்கு ஒப்பான நீ எனது அஞ்ஞானாந்தகாரத்தை அறவே அகற்றி என் முன் தோன்றி அருள் புரி.

हंसः पद्मवनं समिच्छति यथा नीलांबुदं चातकः
कोकः कोकनदप्रियं प्रतिदिनं चन्द्रं चकोरस्तथा ।
चेतो वांछति मामकं पशुपते चिन्मार्गमृग्यं विभो
गौरीनाथ भवत्पदाब्जयुगलं कैवल्यसौख्यप्रदम् ॥ ५९ ॥

ஹம்ஸ: பத்மவனம் ஸமிச்சதி யதா நீலாம்புதம் சாதக:
கோக: கோகநதப்ரியம் ப்ரதிதினம் சந்த்ரம் சகோரஸ்ததா।
சேதோ வாஞ்சதி மாமகம் பசுபதே சின்மார்க்கம்ருக்யம் விபோ
கௌரீநாத பவத் பதாப்ஜயுகளம் கைவல்யஸௌக்யப்ரதம் ||

ஸகல ஜீவராசிகளுக்கும் பதியான ஹே பசுபதே! தாமரை மலர்கள் நிறைந்த தடாகத்தை அன்னப் பறவைகள் விரும்புகின்றன. அத்தாமரைகள் அவைகளுக்கு ஸுகத்தை அளிக்கின்றன. அதுபோல ஸுகத்தை அளிக்கின்ற உனது திருவடித் தாமரைகளை எனது மனம் விரும்புகிறது. சாதகம் என்பது ஒரு பறவை. அது மழை ஜலத்தை பருகி ஸுகத்தை அடைகிறது. அதற்காக அது நீருண்ட மேகத்தை விரும்புகிறது. ஹே எங்கும் நிறைந்த ஈசா! அதுபோல, ஸகல ஸுகத்தையுமளிக்கின்ற உனது தாமரையடிகளை எனது மனம் விரும்புகிறது. கோக: என்பது சக்ரவாகப்பக்ஷி. இப்பக்ஷிக்கு சூரியன் ஆனந்தத்தைத்தருகிறான். ஆகையால் சக்ரவாகம் அவனை விரும்புகிறது. அது போலவே ஆனந்த தாயகமான உனது திருவடித்தாமரைகளை எனது மனம் விரும்புகிறது. சகோரம் என்பது மற்றொரு பக்ஷி. நிலவின் ஒளியை உணவாகக் கொள்வதால் சந்திரனை இது மிகவும் விரும்புகிறது. அது போலவே ஹே உமாபதியே! உபநிடதங்களில் தேடி அறியக் கூடியதும் நிர்குணப்ரஹ்மானந்தானுபவத்தை மட்டுமே அளிக்க வல்லதுமான உனது திருவடித் தாமரைகள் இரண்டையும் எனது மனமானது விரும்புகிறது.

रोधस्तोयहृतः श्रमेण पथिकश्छायां तरोर्वृष्टितः
भीतः स्वस्थगृहं गृहस्थमतिथिर्दीनः प्रभुं धार्मिकम् ।
दीपं सन्तमसाकुलश्च शिखिनं शीतावृतस्त्वं तथा
चेतस्सर्वभयापहं व्रज सुखं शंभोः पदांभोरुहम् ॥ ६० ॥

ரோதஸ்தோயஹ்ருத: ச்ரமேண பதிகச்சாயாம்தரோர்-
வ்ருஷ்டித:
பீத: ஸ்வஸ்த்த-க்ருஹம் க்ருஹஸ்த்தமதிதிர்தீன: ப்ரபும்
தார்மிகம் |

**தீபம் ஸந்தமஸாகுலச்ச சிகினம் சீதாவ்ருதஸ்த்வம் ததா**
**சேதஸ்ஸர்வ பயாபஹம் வ்ரஜ ஸுகம் சம்போ: பதாம்-**
**போருஹம் ||**

பெரு வெள்ளத்தில் அகப்பட்டவன் தன்னுயிரைக் காத்துக் கொள்வதற்கு கரை எங்கே எங்கே என தவிக்கிறான். அது போலவே வழி நடக்கும் வழிப் போக்கன் நடந்து நடந்து களைத்துப் போனதும் ஒரு மரத்தின் நிழலை நாடிச் செல்கிறான். கொட்டும் மழையைக்கண்டு பயப்பட்ட ஒருவன் ஒரு நல்ல வீட்டில் ஒதுங்கிக் கொள்கிறான். ஒரு கிராமத்திலிருந்து புறப்பட்ட ஒரு விருந்தாளி (அதிதி) யானவன் கர்மானுஷ்டான தத்பரனான ஒரு சிறந்த இல்லறத்தானை நாடிச் செல்கிறான். ஏழ்மையின் கொடுமையால் வாடுகின்ற ஒருவன் கொடை வள்ளலும் தர்மிஷ்டனுமான ஒரு செல்வந்தனை அடைகிறான். காரிருட்டில் அகப்பட்டு தவிக்கின்றவன் வெளிச்சத்தை கொடுக்கின்ற விளக்கைத் தேடுகிறான். கடும் குளிரால் நடுங்குகின்ற ஒருவன் குளிர் காய்வதற்கு நெருப்பைத் தேடுகிறான். ஹே மனமே! முன் சொல்லப்பட்டவர்கள் ஒவ்வொருவரும் எப்படியோ அது போல நீயும் ஸ்ரீ பரமேச்வரனின் பாதங்களை நாடு. முன் சொன்னவைகள் யாவும் அனித்யமான ஸுகத்தை மட்டுந் தான் அளிக்கும். ஆனால் தாமரை மலர் போன்ற ஸ்ரீ பரமேச்வரனின் திருப்பாதங்கள் இரண்டும் ஸகல பயங்களையும் விரட்டி ஸர்வ ஸுகங்களையும் அளிக்கும் வல்லமை பெற்றதாகும். ஆகையால் நீ அத்திருப்பாதங்களையே நாடி அடை.

**अंकोलं निजबीजसन्ततिरयस्कान्तोपलं सूचिका**
**साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धुस्सरिद्वल्लभम् ।**
**प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्दद्वयं**
**चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥**

அங்கோலம் நிஜபீஜஸந்ததிரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்துஸ்ஸரித்வல்லபம் ।
ப்ராப்னோதீஹ யதா ததா பசுபதே: பாதாரவிந்த-த்வயம்
சேதோவ்ருத்திருபேத்ய திஷ்டதி ஸதா ஸா பக்திரித்யுச்யதே ||

இவ்வுலகில் விசேஷமான சில பொருள்கள் இருக்கின்றன. அங்கோலம் (அழிஞ்சல்) என்ற மரத்தினுடைய விதைகள் மரத்திலிருந்து கீழே விழுந்தவுடன் அவை தானாகவே பிறர் உதவியின்றி நகர்ந்து தாய் மரத்துடன் ஒட்டிக் கொள்கிறது. அது போலவும், காந்தக் கல்லானது இரும்பினாலான ஊசியை இழுப்பது போலவும், கற்புடைய பெண்மணி தன் கணவனையே நாடுவது போலவும், கொடிகள் மரங்களையே தழுவுவது போலவும், ஆறு கடலை யடைவது போலவும் அடி மனத்தில் எழும்புகின்ற நுண்ணிய எண்ண அலைகள் ஸ்ரீ பரமேச்வரனுடைய திருப்பாதங்களை அடைந்து அதைவிட்டு அகலாமல் ஸதா ஸர்வகாலமும் இருந்தால் அதுவே பக்தி எனப்படுகிறது. அதுவே அரியது: அதுவே பெரியது.

आनन्दाश्रुभिरातनोति पुलकं नैर्मल्यतश्छादनं
वाचा शङ्खमुखे स्थितैश्च जठरापूर्तिं चरित्रामृतैः ।
रुद्राक्षैर्भसितेन देव वपुषो रक्षां भवद्भावना-
पर्यङ्के विनिवेश्य भक्तिजननी भक्तार्भकं रक्षति ॥६२॥

ஆனந்தாச்ருபிராதனோதி புலகம் நைர்மல்யதச்சாதனம்
வாசா சங்க்கமுகே ஸ்திதைச்ச ஜடராபூர்த்திம் சரித்ரா
ம்ருதை: ।
ருத்ராக்ஷைர்பஸிதேன தேவ வபுஷோ ரக்ஷாம் பவத்பாவனா
பர்யங்கே விநிவேச்ய பக்திஜனனீ பக்தார்ப்பகம் ரக்ஷதி || 62 ||

சுயம்ப்ரகாச ஸ்வரூபியான ஹே தேவ! பக்தன் ஓர் குழந்தையாகவே இருக்கிருன். அக்குழந்தையிடமுள்ள பக்தியே அவனது தாய். ஒரு தாய் எப்படி எல்லாம் தன் குழந்தையை காப்பாற்றுகிருளோ அது போல பக்தி என்ற தாயும் பக்தனை தன் குழந்தையைப் பேணுகிருள். உனது திருவுருவ த்யானம் என்ற மஞ்சத்திலே பக்தன் என்ற குழந்தையை பக்தி என்ற தாய் படுக்க வைக்கிருள். குழந்தையை பெற்ற ஒரு தாயினுடைய ஆனந்தக் கண்ணீர் பட்டு குழந்தையின் உடலில் மயிற் கூச்சல் உண்டாகிறது என்பது உலகத்தில் இயற்கை. அது போல பக்தனை குழந்தையின் உடலில் அவனிடமேயுள்ள பக்தி என்ற தாயின் ஆனந்தக் கண்ணீர் வழிந்து சொட்டுகிறது. அதனல் அக்குழந்தையின் உடலில் ரோமாஞ்சம் உண்டாகிறது. கள்ளம் கபடமற்ற நல்ல எண்ணங்களையே இக் குழந்தைக்கு குளிர், கொசு முதலிய உபாதைகள் ஏற்படாதபடி வஸ்த்ரமாக அணிவித்து பாதுகாக்கிருள் பக்தி என்ற தாய். குழந்தைக்கு பால் புகட்டும் பாலாடை (சங்கு) வேதம் என்ற வாக்கு ஆகிறது. உனது புண்ய சரிதம் என்ற அம்ருதத்தை பாலாகக் குழந்தைக்கு புகட்டி வயிற்றை நிரப்புகிருள். விபூதியைக் குழந்தையின் உடல் முழுவதும் தடவுகிருள். ருத்ராக்ஷ மாலையை அதற்கு அணிவிக்கிருள். இவை குழந்தைக்கு ரக்ஷாகவசமாக ஆகிறது. இவ்விதம் பக்தி என்ற தாய் பக்தன் என்ற குழந்தையை கண்ணும் கருத்துமாக பாதுகாப்பதால், ஒரு தாய் எப்படி மூவுலகிலும் சிறந்தவளாக கருதப்படுகிருளோ அது போல எவ்வுலகிலும் அரியதும், பெரியதும், சிறந்ததும் பக்தி ஒன்றேயாகும்.

मार्गावर्तितपादुका पशुपतेरंगस्य कूर्चायते
गण्डूषांबुनिषेचनं पुररिपोर्दिव्याभिषेकायते ।
किंचिद्भक्षितमांसशेषकबलं नव्योपहारायते
भक्तिः किं न करोत्यहो वनचरो भक्तावतंसायते ॥

**மார்க்காவர்த்திதபாதுகா பசுபதேரங்கஸ்ய கூர்ச்சாயதே**
**கண்டுஷாம்புநிஷேசனம் புரரிபோர் திவ்யாபிஷேகாயதே ।**
**கிஞ்சித்பக்ஷிதமாம்ஸசேஷகபளம் நவ்யோபஹாராயதே**
**பக்தி: கிம் ந கரோத்யஹோ வநசரோ பக்தாவதம்ஸாயதே ॥**

[காளஹஸ்தீச்வரருடைய கண்களில் இரத்தம்ப்ரவஹிப்பதை பார்த்து வேடுவன் ஒருவன் ஸ்வாமியிடம் இருக்கும் ப்ரியத்தால் ஸ்வாமிக்கு தன் கண்களையே ஸமர்ப்பித்தான் என்ற புராணக் கதையை மனத்தில் கொண்டு அவன் ஸ்வாமிக்கு செய்த மகிமை பொருந்திய கைங்கரியங்களை இந்த ச்லோகத்தில் பகவத் பாதரவர்கள் பாடியருளியிருக்கிறார்கள்]

லிங்கவடிவமாய் எழுந்தருளியிருக்கின்ற பரமேச்வரனின் ஒரு கண்ணிலிருந்து இரத்தம் வழிவதைப் பார்த்த வேடனொருவன் தன் கண்ணைப் பறித்து அந்த இடத்தில் வைத்தான். அப்பொழுது மற்ற கண் வழியாக ரத்தம் வழிந்தது. அந்த கண்ணிலும் தன் மற்றொரு கண்ணைப் பறித்து வைக்க எண்ணிய அந்தத் தலை சிறந்த பக்தனான வேடன் செருப்பை அணிந்த தன் ஒரு காலை அடையாளமாக ஆண்டவனின் புருவ மத்தியில் வைத்தான். ஆகையால் செருப்பு ஸ்வாமிக்கு புருவ மத்தியாயிற்று. ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்ய ஜலம் வேண்டும். அதற்கு ஒரு பாத்திரமும் வேண்டும். வேடனிடம் பாத்திரம் இல்லாததால் தன் வாயிலேயே ஜலத்தைக் கொண்டு வந்து அபிஷேகமாக உமிழ்ந்தான். த்ரிபுரங்களை எரித்த அந்த பரமேச்வரனுக்கு வேடுவனுடைய அந்த வாய் ஜலம் திவ்யமான அபிஷேக ஜலமாக ஆயிற்று. அவனால் சிறிது உண்ட மாம்ஸத் துண்டு அவருக்கு மஹா நைவேத்யமாக ஆயிற்று. இந்த வேடுவன் பக்தர்களில் தலை சிறந்தவனாகக் கருதப்படுகிறான். ஆகையால் பக்தி எதைத்தான் செய்யாது.

वक्षस्ताडनमन्तकस्य कठिनापस्मारसंमर्दनं
भूभृत्पर्यटनं नमत्सुरशिरः कोटीरसंघर्षणम् ।
कर्मेदं मृदुलस्य तावकपदद्वन्द्वस्य गौरीपते
मच्चेतोमणिपादुकाविहरणं शंभो सदङ्गीकुरु ॥ ६४ ॥

வக்ஷஸ்தாடனமந்தகஸ்ய கடிநாபஸ்மாரஸம்மர்த்தனம்,
பூப்ருத் பர்யடனம் நமத்ஸுரசிர: கோடீரஸங்கர்ஷணம் ।
கர்மேதம் ம்ருதுலஸ்ய தாவகபதத்வந்த்வஸ்ய கௌரீபதே
மச்சேதோ மணிபாதுகாவிஹரணம் சம்போ ஸதாங்கீகுரு ॥

*ஹே சம்போ! முன்பொரு சமயம் உனது பக்தனை மார்க்கண்டேயனின் உயிரைப் பறிக்க வந்த யமனுடைய கடினமான மார்பை மிக மேன்மையான உனது காலால் உதைத்தாய். மிகக் கொடூரமான அபஸ்மாரம் என்ற அஜ்ஞானத்தை உனது காலடியில் இட்டு அழுத்தி நிக்ரஹித்தாய். ஸதா வெள்ளியங்கிரியிலேயே நடனமாடுகின்றாய். தேவர்கள் உன்னை வணங்கும் பொழுது அவர்கள் அணிந்திருக்கின்ற கிரீடங்களில் உனது பாதங்கள் இரண்டும் படுகிறது. ஹே கௌரியின் பதியே! இந்நான்கு காரியங்களையும் செய்து மிகத் துன்புற்ற உனதுகால்கள் இரண்டையும் பூ போன்ற எனது மனமாகிற மணிமயமான பாதுகையில் வைத்து ஸதா ஸர்வகாலமும் ஸஞ்சரித்துக் கொண்டே இரு.*

वक्षस्ताडनशंकया विचलितो वैवस्वतो निर्जराः
कोटीरोज्ज्वलरत्नदीपकलिकानीराजनं कुर्वते ।
दृष्ट्वा मुक्तिवधूस्तनोति निभृताश्लेषं भवानीपते
यच्चेतस्तव पादपद्मभजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥

வக்ஷஸ்தாடனசங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா:
கோடீரோஜ்வலரத்னதீபகலிகாநீராஜனம் குர்வதே ।
த்ருஷ்ட்வா முக்திவதூஸ்தனோதி நிப்ருதாச்லேஷம் பவானீ-
பதே
யச்சேதஸ்தவ பாதபத்மபஜனம் தஸ்யேஹ கிம் துர்லபம் ॥

ஹே பார்வதீரமண! எவனுடைய மனமானது உன் திருவடித் தாமரைகளையே பஜிக்கின்றதோ அவனைக் கண்ட யமன், மறுபடியும் உனது காலால் அவனது மார்பை உதைப்பாயோ என்று ஸந்தேஹித்து விலகிச் சென்று விடுகிறான். தேவர்கள் அணிந்திருக்கின்ற கிரீடங்கள் ரத்தினங்களால் இழைக்கப்பட்டு அவை ரத்ன தீபமாக ஒளிவீசுகிறது. அப்படிப்பட்ட தீபத்தை உனது பக்தனுக்குத் தேவர்கள் நீராஜனமாகக் காண்பிக்கிறார்கள். முக்தி என்ற பெண் அவனை மிகவும் நெருக்கமாகக் கட்டித் தழுவுகிறாள். இவ்வுலகில் அவனுக்கு அரியது எது. எதுவுமேயில்லை சிவபாதங்களில் அர்பித்த மனத்தையுடையவனுக்கு இவ்வுலகில் எல்லாமே மிக எளிதில் கிடைக்கிறது.

क्रीडार्थं सृजसि प्रपंचमखिलं क्रीडामृगास्ते जनाः
यत्कर्माचरितं मया च भवतः प्रीत्यै भवत्येव तत् ।
शंभो स्वस्य कुतूहलस्य करणं मच्चेष्टितं निश्चितं
तस्मान्मामकरक्षणं पशुपते कर्तव्यमेव त्वया ॥ ६६ ॥

க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி ப்ரபஞ்சமகிலம் க்ரீடாம்ருகாஸ்தே ஜனா:
யத்கர்மாசரிதம் மயா ச பவத: ப்ரீத்யை பவத்யேவ தத் ।
சம்போ ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் மச்சேஷ்டிதம் நிச்சிதம்
தஸ்மான் மாமகரக்ஷணம் பசுபதே கர்த்தவ்யமேவ த்வயா ॥

மங்கள ஸ்வரூபியான ஹே ஸாம்பசிவ! இதோ காணப்படுகின்ற இந்த அகில உலகங்களையும் உனது விளையாட்டிற்காகவே நீ படைத்திருக்கிறாய் என்பது நிச்சயமே. ஏனெனில் நீ ஸர்வேச்வரன். உனக்கு இவ்வுலகைப் படைத்து ஆக வேண்டியது எதுவுமேயில்லை. நீ ஸர்வாபீஷ்டங்களையும் அடைந்து ஆனந்த ஸ்வரூபியாக, ஆப்தகாமனாக இருக்கிறாய். அப்படிப்பட்ட உனக்கு இவ்வுலகத்து மக்கள் எல்லோரும் உன்னால் விளையாடப்படுகின்ற ம்ருகங்களே தான். அப்படிப்பட்ட ம்ருகங்களில் நானும் ஒருவன். உனது விளையாட்டிற்காக உன்னால் படைக்கப்பட்ட நான் ஏதேது காரியங்களைச் செய்தேனோ அவை யாவும் உனது ப்ரீதிக்காகவே தான். ஆகையால் என் செயல்கள் யாவுமே உனது ஸந்தோஷத்திற்கு ஸாதனம் என்பதும் நிச்சயமே. ஹே பசுபதியே, ஆதலால் என்னை நீ காப்பாற்ற வேண்டுமென்பது உனது கடமையே தான்.

बहुविधपरितोषबाष्पपूर-
स्फुटपुलकांकितचारुभोगभूमिम् ।
चिरपदफलकांक्षिसेव्यमानां
परमसदाशिवभावनां प्रपद्ये ॥ ६७ ॥

பஹுவித பரிதோஷ பாஷ்பபூர-
ஸ்புட புலகாங்கிதசாருபோக பூமிம் ।
சிரபத பலகாங்க்ஷி ஸேவ்யமானாம்
பரமஸதாசிவ பாவனாம் ப்ரபத்யே ॥ 67 ॥

அநேக விதமான ஸந்தோஷங்களின் அனுபவத்தால் உள்ளம் உருகிக் குளிர்ந்த ஆநந்தக் கண்ணீர் கண்களில் வழிய, உடலெல்லாம் ரோமாஞ்சம் மிகத் தெளிவாக ஏற்

பட்டு, ஆநந்தத்தை அனுபவிக்கும் மனோஹர போகபூமி யாகிய அழிவற்ற கைலாஸத்தை விரும்புகின்ற மஹான்களால் ஸேவிக்கப்படுகின்ற, அந்த மிக சிறந்த வித்யாநந்தமே உருவாக அமர்ந்திருக்கின்ற பரமேச்வரத்யானத்தை நான் சரணமடைகிறேன்.

अमितमुदमृतं मुहुर्दुहन्तीं
विमलभवत्पदगोष्ठमावसन्तीम् ।
सदय पशुपते सुपुण्यपाकां
मम परिपालय भक्तिधेनुमेकाम् ॥ ६८ ॥

**அமிதமுதம்ருதம் முஹுர்-துஹந்தீம்**
**விமல-பவத்பத-கோஷ்டமாவஸந்தீம் |**
**ஸதய பசுபதே ஸுபுண்ய பாகாம்**
**மம பரிபாலய பக்திதேனுமேகாம் || 68 ||**

எல்லையில்லாக்கடல்போல் கருணையுடன் மக்களாகிற பசுக்களை பரிபாலிக்கின்ற ஹே பசுபாலக! ஒருவன் ஒரு பசுவைக் காப்பாற்றி அதன் அம்ருதமயமான பாலைப் பருகி அனுபவித்து வருகிறான். காலப்போக்கில் அவன் அப்பசுவைக் காப்பாற்ற வழியில்லாதவனாகி விடுகிறான். அப்பொழுது அவன் அப்பசுவை அநேகம் பசுக்களை வைத்து போஷிக்கின்ற ஒரு தனவந்தனிடம் விட்டுவிடுகிறான். அது போலவே ஹே பசுபதே என்னிடமும் ஒரு பசு இருக்கிறது. பக்தி என்ற அப்பசுவை நான் காப்பாற்றி வருகிறேன். அளவில்லாத ஆனந்தம் என்ற பாலை அடிக்கடி அது சுரக்கிறது. அதை நான் கறந்து பருகி வருகிறேன். மிக சுத்தமானதும் அழுக்கே இல்லாததுமான உனது திருவடித் தாமரை என்ற கொட்டிலில் அதை விட்டிருக்கிறேன். அப்பசு ஆனந்தமாக அங்கே வாஸம் செய்கிறது. முன்ஜன்மாக்

களில் நான் செய்த புண்யத்தின் பயனாக கிடைத்த அந்த பக்தி என்ற எனது பசுவை மட்டும் நீ போஷித்து காப்பாற்ற வேண்டும்.

जडता पशुता कलंकिता
कुटिलचरत्वं च नास्ति मयि देव ।
अस्ति यदि राजमौले
भवदाभरणस्य नास्मि किं पात्रम् ॥ ६९ ॥

ஜடதா பசுதா கலங்கிதா
குடிலசரத்வஞ்ச நாஸ்தி மயி தேவ ।
அஸ்தி யதி ராஜமௌலே
பவதாபரணஸ்ய நாஸ்மி கிம் பாத்ரம் ॥ 69 ॥

பேரொளியையுடைய ஹே தேவ! சந்திரனை நீ உனது தலையில் ஜடாமுடிக்கு ஆபரணமாக சூடிக்கொண்டு அவனுக்கு அபயமளித்திருக்கிறாய். அவன் அப்படி உன்னால் மதிக்கப்படுவதற்கு தகுதி பெற்றவனில்லை. அவனிடம் பல குறைகள் இருக்கின்றன. அமாவாசையன்று சூரியனின் ஒளியால் தன்னொளி இழந்து மூடத்தன்மையை அடைந்து விடுகிறான். எப்பொழுதும் வக்ரமாகவே செல்கிறான். அவனது பிம்பம் குடிலமானது. பசுக்களை போலவே அவன் விவேகமற்றவன். தன்னை விட வயதில் மூத்தவரின் பத்தினியை விரும்பி களங்கமுள்ளவனாக ஆனவன். இப்படி இவ்வளவு தோஷங்களையுடைய அந்தச் சந்திரனை உனது தலைக்கு ஆபரணமாக நீ ஏற்றுக் கொண்டிருக்கிறாய். ஸாமான்யமானவர்கள் குற்றமுள்ளவர்களை ஏற்று கொள்வதில்லை. நீ அவனை ஏற்றுக் கொண்டதற்கு காரணம் உனது கருணையே. குற்றம் குறையுள்ள சந்திரனைச் சூடிய ஹே பெருமானே! எந்த விதமான களங்கமுமற்ற நான்

உனது கருணைக்குப் பாத்திரனில்லையா! சந்திரனை ஏற்றுக் கொண்ட நீ என்னையும் ஏற்றுக் கொள்வது தான் சரி.

अरहसि रहसि स्वतन्त्रबुद्धया
वरिवसितुं सुलभः प्रसन्नमूर्तिः ।
अगणितफलदायकः प्रभुर्मे
जगदधिको हृदि राजशेखरोस्ति ॥ ७० ॥

அரஹஸி ரஹஸி ஸவதந்த்ர-புத்த்யா
வரிவஸிதும் ஸுலப: ப்ரஸ்ன்னமூர்த்தி: ।
அகணித பலதாயக: ப்ரபுர்மே
ஜகததிகோ ஹ்ருதி ராஜசேகரோஸ்தி ॥ 70 ॥

மிகப் புகழ் பெற்ற ஒரு பெரிய அதிகாரியிடம் ஒருவனுக்கு செல்வாக்கு இருந்தால் அவன் எப்படி அவரிடம் தனது காரியங்களை ஸாதித்து கொள்வது என்பது சுலபமோ அது போல எனக்கு அருள் புரிவதற்காகவே ஆனந்தமாக அமர்ந்திருப்பவரும், அளவில்லாத எனது அபீஷ்டங்களையெல்லாம் அள்ளி அள்ளி அளிக்கின்றவரும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழில்களையும் சரிவரச் செய்யும் வல்லமையுடையவரும், ஜகத்துக்கெல்லாம் வேருகவும் வேறு அல்லாமலும் இருக்கின்றவரும் ஸத், சித், ஆனந்தமே உருவமாக இருக்கின்றவரும், சந்திரனைத் தன் தலையில் சூடி ராஜசேகரனுக ப்ராசிக்கின்றவருமான அந்த பரமேச்வரன் எனது இதயக்கோயிலில் நிரந்தரமாக குடி கொண்டிருக்கையில் எனது உள்ளத்து உணர்ச்சிகளுக்கு வெளியிலேயோ அல்லது எனது உள்ளத்தினுள்ளேயோ எனக்கு ஸ்வாதீனமானவன் என்ற நினைப்புடன் அப்பெருமானுக்கு பரிசாரகம் செய்வதற்கு மிகவும் எளிதாக இருக்கிறுர்.

आरूढभक्तिगुण कुंचितभावचाप-
युक्तैश्शिवस्मरणबाणगणैरमोघैः ।
निर्जित्य किल्बिषरिपून् विजयी सुधीन्द्र-
स्सानन्दमावहति सुस्थिरराजलक्ष्मीम् ॥ ७१ ॥

ஆருடபக்தி குண குஞ்சித பாவ சாப-
யுக்தை : சிவஸ்மரண பாணகணைரமோகை : ।
நிர்ஜித்ய கில்பிஷரிபூன் விஜயீ ஸுதீந்த்ரஸ்-
ஸாநந்த-மாவஹதி ஸுஸ்த்திர ராஜலக்ஷ்மீம் ॥ 71 ॥

ஒரு சிறந்த அரசன் தன் வில்லை எடுத்து அதில் கூரிய பாணங்களைப் பூட்டி எதிரிகளையெல்லாம் வென்று நாட்டில் நிலையான ராஜ்யலக்ஷ்மியை எவ்விதம் நிலைநிறுத்துகிருனே, அது போல அறிஞர்களுள் சிறந்தவனுன ஒரு விவேகி தன் உள்ளத்துள்ளே எழும்புகின்ற நுண்ணிய எண்ணங்களோடு கூடின புத்தியை வில்லாகக் கருதி சிவஸாரூப்யத்தை அளிக்கின்ற பக்தி என்ற நாணினல் அவ்வில்லாகிற புத்தியை மிக அழகாக வளைத்து ஸ்திரமான பலனைக் கொடுக்கின்ற சிவநாமஸ்மரணங்களாகிய பாணக் கூட்டங்களால் பாபங்களாகிய எதிரிகளை அடியோடு அழித்து ஜயசீலனுக, வெற்றி வேந்தனுக, இருந்து கொண்டு ப்ரஹ்மா முதலியவர்களுக்கெல்லாம் அரசனுக ப்ரகாசிக்கின்ற பரமசிவத்துடன் ஐக்யமாகி, அழிவற்ற மோக்ஷ ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை ஆனந்தத்துடன் அனுபவித்துக் கொண்டிருக்கிருன்.

ध्यानांजनेन समवेक्ष्य तमः प्रदेशं
भित्वा महाबलिभिरीश्वरनाममन्त्रैः ।

दिव्याश्रितं भुजगभूषणमुद्वहन्ति
ये पादपद्ममिह ते शिव ते कृतार्थाः ॥ ७२ ॥

த்யானாஞ்ஜனேன ஸமவேக்ஷ்ய தம: ப்ரதேசம்
பித்வா மஹாபலிபிரீச்வரநாம-மந்த்ரை: ।
திவ்யாச்ரிதம் புஜகபூஷணமுத்வஹந்தி
யே பாதபத்மமிஹ தே சிவ தே க்ருதார்த்தா: ॥ 72 ॥

மங்கள ஸ்வரூபியான ஹே சிவ! அஞ்ஜனம் என்பது ஒரு விதமான மை. இதை உபயோகித்து மறைத்து வைக்கப்பட்டிருக்கின்ற புதையல் முதலிய பொருள்களைக் கண்டுபிடித்து அப்புதையலைக் காத்து வருகின்ற தேவதைகளுக்கு பலி முதலியவைகளைக் கொடுத்து புதைந்து கிடக்கின்ற புதையலைத் தோண்டி எடுத்து ஆனந்தமடைவார்கள் இவ்வுலகத்து மக்கள். அது போலவே எல்லோர் உள்ளத்துள்ளேயும் புதைந்து கிடக்கின்றவரும், தேவர்களால் போற்றிப் புகழப்படுகின்றவரும் ஸர்பங்களை ஆபரணமாகக் கொண்டவருமான உன்னுடைய திருவடித் தாமரை என்ற பத்ம நிதியை த்யானம் என்ற மையினால் உள்ளத்துள்ளே ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற உனது பாதபத்மம் என்ற வஸ்துவை மிக நன்ருக உற்று நோக்கி அறிந்து, உனது திவ்ய நாமங்கள் என்ற மஹாமந்திரங்களை ஓதி அதை பரிபாலிக்கின்ற தேவதைகளுக்குப் பலியாகக் கொடுத்து த்ருப்திப்படுத்தி, அறியாமை என்ற இருட்டை அழித்து இப்பிறவியிலேயே எந்த பக்தர்கள் அடைகிருர்களோ அந்த பக்தர்கள் மிகவும் த்ன்யர்கள். அவர்கள் பிறவிப்பயனை அடைந்தவர்களாக ஆகிருர்கள்.

भूदारतामुदवहद्यदपेक्षया श्री-
भूदार एव किमतस्सुमते लभस्व ।

केदारमाकलितमुक्तिमहौषधीनां
पादारविन्दभजनं परमेश्वरस्य ॥ ७३ ॥

பூதாரதாமுதவஹத் யதபேக்ஷயா ஸ்ரீ-
பூதார ஏவ கிமத: ஸுமதே லபஸ்வ ।
கேதாரமாகலிதமுக்தி மஹௌஷதீனும்
பாதாரவிந்த பஜனம் பரமேச்வரஸ்ய ॥ 73 ॥

[ப்ரஹ்மா ஹம்ஸமாக ஆகி பரமேச்வரனின் சிரஸை தேடிச் சென்ருர் என்றும் மஹாவிஷ்ணு பன்றியாக ஆகி பரமேச்வரனின் சரணாரவிந்தங்களை தேடிச் சென்ருர் என்றதையும் மனதில் கொண்டு ஆதி சங்கர பகவத் பாதர்கள் ஸ்வாமியின் சரணாரவிந்தங்களை துதிக்கிருர்கள்].

ஹே என் நல்ல புத்தியே! பூமிதேவியையும் ஸ்ரீதேவியையும் பத்னியாகக் கொண்ட மஹாவிஷ்ணுவே பன்றியாக மாறி பரமேச்வரனின் சரணாரவிந்தங்களைத் தேடினுர் என்றது மிகவும் ப்ரஸித்தமானது. ஆகையால் ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாயுஜ்யம், ஸாரூப்யம் என்ற நான்குவித முக்தி என்ற மூலிகைகளுக்கு உற்பத்தி ஸ்தானமாகிய ஸ்ரீ பரமேச்வர சரணாரவிந்தங்களைப் பஜனம் செய்வதையே நீ விரும்பு (அடை).

आशापाशक्लेशदुर्वासनादि-
भेदोद्युक्तैर्दिव्यगन्धैरमन्दैः ।
आशाशाटीकस्य पादारविन्दं
चेतःपेटीं वासितां मे तनोतु ॥ ७४ ॥

ஆசா பாச க்லேச துர்வாஸனுதி-
பேதோத்யுக்தைர் திவ்ய கந்தைரமந்தை: ।

**ஆசா சாடிகஸ்ய பாதாரவிந்தம்**
**சேத : பேடீம் வாஸிதாம் மே தனோது || 74 ||**

எனது மனமானது ஒரு பெட்டியைப் போன்றது. அப்பெட்டி பலவிதமான கெட்ட வாஸனைகளால் நிரம்பியிருக்கிறது. அப்படி நிரம்பியிருக்கின்ற கெட்ட வாஸனைகளில் ஒன்று ஆசை. அது உலகில் எதை எவ்வளவு தடவை அனுபவித்தாலும் போதுமென்ற எண்ணமே வராமல் ஒரு கயிறு போல கட்டுகிறது. அறியாமையும், நான் நானென்ற தேஹாபிமானமும், அவனவனுக்கு ப்ரியமானவைகளில் விருப்பமும், ப்ரியமில்லாதவைகளில் வெறுப்பும், எந்த விதமான ப்ரயோஜனமில்லாத காரியங்களைச் செய்தே தீருவது என்ற பிடிவாத குணமுமான ஐந்து வித கெட்ட வாஸனைகளும் மனமென்னும் பெட்டிக்குள் நிரம்பி இருக்கிறது. இந்த கெட்ட வாஸனைகளை போக்கடிக்கின்றதும் தைவமணம் வீசுகின்றதும், திசைகளை ஆடையாகக் கொண்டவருமான பரமேச்வரனுடைய சரணங்கள் என்ற தாமரை மலர் என்னுடைய மனமென்னும் பெட்டியை நறுமணம் கமழும்படி செய்யட்டும்.

कल्याणिनं सरसचित्रगतिं सवेगं
सर्वेङ्गितज्ञमनघं ध्रुवलक्षणाढ्यम् ।
चेतस्तुरङ्गमधिरुह्य चर स्मरारे
नेतस्समस्तजगतां वृषभाधिरूढ ॥ ७५ ॥

**கல்யாணினம் ஸரஸ சித்ரகதிம் ஸவேகம்**
**ஸர்வேங்கிதஜ்ஞமனகம் த்ருவலக்ஷணாட்யம் |**
**சேதஸ்துரங்கமதிருஹ்ய சர ஸ்மராரே**
**நேதஸ்ஸமஸ்தஜகதாம் வ்ருஷபாதிரூட || 75 ||**

வ்ருஷபத்தை வாஹனமாக கொண்டவரே! ஸகல உலகங்களுக்கும் நாயகரே! காமதேவனின் எதிரியே! ஹே பரமேச்வர! எனது மனம் ஓர் குதிரையே. மங்களகரமான ஸாமுத்ரிகா லக்ஷணங்கள் பொருந்திய ஒரு குதிரையை போலவே எனது மனமும் இருக்கிறது. குதிரையானது மிக வேகமான கதியையுடையது. இருந்தாலும் அதற்கு ஆஸ்கந்திதம், தௌரிதகம், ரேசிதம், வல்லிதம், ப்லுதமென்ற ஐந்து வித வேகம் தான் உள்ளது. எனது மனமோ பலவிதமான வேகங்களைக் கொண்டது. யஜமானனின் விருப்பங்களை அறியும் திறமையுடைய குதிரையை போலவே எனது மனமும் நல்ல அறிவையுடையதே. எக்குறைவுமில்லாத குதிரையை போலவே எனது மனமும் கள்ளங்கபடமின்றி நாலாதேசங்களிலும் மிக வேகத்துடன் ஸஞ்சரிப்பதால் உலகநாயகனே நீ எனது மனமாகிற இக்குதிரை மேலேறி ஸஞ்சாரம் செய். காலை மேலேறி ஸஞ்சரிப்பதை விட குதிரை மேலேறி ஸஞ்சரிப்பதே சிறந்தது

भक्तिर्महेशपदपुष्करमावसन्ती
कादंबिनीव कुरुते परितोषवर्षम् ।
संपूरितो भवति यस्य मनस्तटाक-
स्तज्जन्मसस्यमखिलं सफलं च नान्यत् ॥ ७६ ॥

பக்திர் மஹேச பத புஷ்கர மாவஸந்தீ
காதம்பினீவ குருதே பரிதோஷவர்ஷம் |
ஸம்பூரிதோ பவதி யஸ்ய மனஸ்தடாகஸ்-
தஜ்ஜன்ம ஸஸ்யமகிலம் ஸபலஞ்ச நான்யத் || 76 ||

ஸர்வேச்வரனின் பாதபத்மங்களைப் பக்தியுடன்ஸேவிக்காதவர்களுக்கு இவ்வுலகில் ஆனந்தம் கிடைப்பது அரிதே. பரமேச்வரனுடைய சரணாரவிந்தங்கள் ஆகாயம் போல பரவிக்கிடக்கிறது. அவ்வாகாயத்தில் பக்தி என்ற மேகங்

களின் வரிசையான மாலைகள் பேரானந்தம் என்ற மழையை பொழிந்து கொண்டேயிருக்கிறது. எந்த பக்தனின் மனம் என்ற தடாகம் அந்த பேரானந்தமாகிற மழையால் நிரம்புகிறதோ அந்த பாக்யவானுன பக்தனின் பிறவியென்ற பயிர் உலகம் முழுதும் பயனுள்ளதாக ஆகின்றது. அப்படி இல்லாதவர்களின் பிறவி வீணுனதேயாகும்.

बुद्धिः स्थिरा भवितुमीश्वर पादपद्म-
सक्ता वधूर्विरहिणीव सदा स्मरन्ती ।
सद्भावनास्मरणदर्शनकीर्तनादि
संमोहितेव शिवमन्त्रजपेन विन्ते ॥ ७७ ॥

**புத்தி: ஸ்திரா பவிதுமீச்வர பாதபத்ம-**
**ஸக்தா வதூர் விரஹிணீவ ஸதா ஸ்மரந்தீ |**
**ஸத்பாவனு ஸ்மரண தர்சன கீர்த்தனுதி**
**ஸம்மோஹிதேவ சிவமந்த்ர ஜபேன வின்தே || 77 ||**

ஸர்வவல்லமை படைத்த ஹே ஈச! தன் கணவனை விட்டுப்பிரிந்து வாழ்கின்ற ஓர் மனைவி எவ்விதம் கணவனையே நினைத்துக் கொண்டிருப்பாளோ அது போல உனது பாதபத்மங்களிலேயே ஸதா ஈடுபட்டிருக்கின்றதும், அவைகளையே நினைக்கின்றதுமான எனது புத்தி நிலைபெற்று ஸ்திரமாக இருப்பதற்கு சிவ மந்திரமான பஞ்சாக்ஷரத்தை அடிக்கடி ஜபித்தல், த்யானம் செய்தல், உனது பாதாரவிந்தங்களையே நினைத்தல் அவைகளை தர்சித்தல், அவைகளை துதி செய்து புகழுதல் இவற்றுள் எதை செய்வதென்று தெரியாமல் மோஹத்தையடைந்தது போல, சிவ சிவ, என்று மட்டும் ஜபித்துக் கொண்டு ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறது.

सदुपचारविधिष्वनुबोधितां
सविनयां सुहृदं सदुपाश्रिताम् ।
मम समुद्धर बुद्धिमिमां प्रभो
वरगुणेन नवोढवधूमिव ॥ ७८ ॥

ஸதுபசார விதிஷ்வனுபோதிதாம்
ஸவிநயாம் ஸ்ுஹ்ருதம் ஸதுபாச்ரிதாம் ।
மம ஸமுத்தர புத்திமிமாம் ப்ரபோ
வரகுணேன நவோட வதூமிவ ॥ 78 ॥

ஸகலவிதமான விருப்பங்களையும் நிறைவேற்றுகின்ற ஹே ப்ரபோ! மிக மஹிமை பொருந்திய உனது திருவடிகளை பூஜிப்பதை முறைப்படி அறிந்து கொண்டும், மிக அடக்கத்துடனும், நல்ல மனதையுடையதாயும் இருக்கிற என்னுடைய இந்த புத்தியை, புதிதாக மணந்துகொள்ளப் பட்ட வதுவிற்கு அவள் கணவன் எவ்விதம் அவள் ஸந்தேஹங்களை எல்லாம் தீர்த்து நல்லுபதேசம் செய்து தன்வசமாகச் செய்து கொள்கிறானோ அவ்விதமே நல்ல நல்ல குணங்களை எல்லாம் எடுத்து அருளி, பலவித ஸந்தேஹங்களைத் தீர்த்து கடைத்தேற்றி விடு.

नित्यं योगिमनस्सरोजदलसंचारक्षमस्त्वत्क्रम-
श्शंभो तेन कथं कठोरयमराड्वक्षः कवाटक्षतिः ।
अत्यन्तं मृदुलं त्वदंघ्रियुगलं हा मे मनश्चिन्तय-
त्येतल्लोचनगोचरं कुरु विभो हस्तेन संवाहये ॥ ७९ ॥

நித்யம் யோகிமனஸ் ஸரோஜதல ஸஞ்சார க்ஷமஸ்த்வத்க்ரம :
சம்போ தேன கதம் கடோர யமராட் வக்ஷ : கவாடக்ஷதி : ।

**அத்யந்தம் ம்ருதுலம் த்வதங்க்ரி யுகலம் ஹா மே மனச்சிந்தய
த்யேதல்லோசன கோசரம் குரு விபோ ஹஸ்தேன ஸம்
வாஹயே ॥ 79 ॥**

மங்களஸ்வரூபியான ஹே பரமேச்வர! மிக மென்மையான தாமரை மலராகவே ஆகி விட்ட யோகிகளின் மனத்தில் தாமரை மலர் போன்ற உனது பாதங்களை அடி எடுத்து வைத்து நீ ஸதா ஸஞ்சரிக்கின்றவனுய் ப்ரகாசிக்கிருய். அப்படிப்பட்ட உனது காலால் கதவைப் போல மிக கடினமான மார்பை பெற்ற அந்த யம தர்மராஜனின் மார்பை நீ எப்படித்தான் உதைத்து தள்ளினுயோ. இது மிக மிக ஆச்சரியமே என எனது மனம் சிந்தனை செய்து கொண்டிருக்கிறது. எங்கும் நிறைந்திருக்கின்ற ஹே பரம் பொருளே! உனது மிக மென்மையான அத் திருத்தாமரை யடிகளை எனது கண்களுக்குப்புலனுகும்படி செய்தருள்புரி. என்கையினுல் அவைகளைத் தாங்குகிறேன்.

**एष्यत्येष जनिं मनोऽस्य कठिनं तस्मिन्नटानीति म
द्रक्षायै गिरिसीम्नि कोमलपदन्यासः पुराभ्यासितः
नोचेद्दिव्यगृहान्तरेषु सुमनस्तल्पेषु वेद्यादिषु
प्रायस्सत्सु शिलातलेषु नटनं शंभो किमर्थं तव ॥८०॥**

**ஏஷ்யத்யேஷ ஜனிம் மனோ(ऽ)ஸ்ய கடினம் தஸ்மிந் நடானீதி-
மத்ரக்ஷாயை கிரிஸீம்னி கோமலபத ந்யாஸ: புராப்யாஸித: ।
நோ சேத்திவ்ய க்ருஹாந்தரேஷு ஸுமனஸ் தல்பேஷு
வேத்யாதிஷு
ப்ராயஸ் ஸத்ஸு சிலாதலேஷு நடனம் சம்போ கிமர்த்தம் தவ**

ஹே ஸாம்பசிவ! உலகில் இந்த மனிதன் பிறக்க போகிமுன். இவனுடைய மனம் அதிகக் கடினம். அப்படிப்

பட்ட இவனுடைய பாறை போன்ற மனத்தில் நான் ஸஞ் சாரம் செய்ய வேண்டுமென்று எண்ணித்தானே என்ன மோ என்னை காப்பதற்காகவே நான் பிறப்பதற்கு முன்பே மென்மையான உனது காலடிகளை மலையின் முகட்டில் வைத்து நடனம் ஆட பழக்கப்படுத்திக் கொண்டாய். அவ்விதமில்லாவிடில் அழகான அறைகளோடு கூடின திவ்யமான வீடுகளும் புஷ்பங்களால் செய்த மஞ்சங்களும் அழகாக அலங்கரிக்கப்பட்ட மண்டபங்களும் இருக்குங் கால் கடினமான கற்பாறைகளின் மேல் நீ நடனமாடுவது எதற்காக.

कंचित्कालमुमामहेश भवतः पादारविन्दार्चनैः
कंचिद्ध्यानसमाधिभिश्च नतिभिः कंचित् कथाकर्णनैः ।
कंचित् कंचिदवेक्षणैश्च नुतिभिः कंचिद्दशामीदृशीं
यः प्राप्नोति मुदा त्वदर्पितमना जीवन् स मुक्तः खलु ॥

**கஞ்சித்காலமுமாமஹேச பவத: பாதார விந்தார்ச்சனை :**
**கஞ்சித்த்யான ஸமாதிபிச்ச நதிபி: கஞ்சித் கதாகர்ணனை: ।**
**கஞ்சித் கஞ்சிதவேக்ஷணைச்ச நுதிபி: கஞ்சித்தசாமீத்ருசீம்**
**ய: ப்ராப்னோதி முதா த்வதர்ப்பிதமனா ஜீவன் ஸ முக்த: கலு ॥**

அம்பிகையுடன் ப்ரகாசிக்கின்ற ஹே உமாமஹேச! மிக்க சந்தோஷத்துடன் மனத்தை உனக்கு அர்ப்பணம் செய்து உன்னுடைய தாமரை போன்ற திருவடிகளைச் சிறிது காலம் எவனொருவன் பூஜை செய்கிறானோ, அவை களை எவன் த்யானம் செய்து சிறிது காலம் ஸமாதி யெய்துகிறானோ, சிறிது காலம் அவைகளை எவன் நமஸ் காரம் செய்கிறானோ, சிறிது காலம் உனது திவ்ய சரித்திரங் களை எவன் கேட்கிறானோ, உனது திவ்ய மங்கள உரு

வத்தைச் சிறிது காலம் எவன் தர்சனம் செய்கிருனே. ஸ்தோத்ரபாராயணுதிகளால் உன்னை எவன் துதிக்கிருனே, மேலே சொல்லப்பட்டது போன்ற நிலையை எவன் அடைகிருனே அவன் அல்லவா வாழ்ந்து கொண்டே மோக்ஷத்தை அடைந்தவன்.

बाणत्वं वृषभत्वमर्धवपुषा भार्यात्वमार्यापते
घोणित्वं सखिता मृदंगवहता चेत्यादिरूपं दधौ ।
त्वत्पादे नयनार्पणं च कृतवान् त्वद्देहभागो हरिः
पूज्यात्पूज्यतरस्स एव हि न चेत् को वा तदन्योऽधिकः

**பாணத்வம் வ்ருஷபத்வமர்த்தவபுஷா பார்யாத்வமார்யாபதே**
**கோணித்வம் ஸகிதா ம்ருதங்கவஹதா சேத்யாதி ரூபம் ததௌ ।**
**த்வத்பாதே நயனார்ப்பணஞ்ச க்ருதவான் த்வத்தேஹ பாகோ ஹரி :**
**பூஜ்யாத் பூஜ்ய தரஸ் ஸ ஏவ ஹி ந சேத் கோ வா ததன்யோ*f*திக : ॥ 82 ॥**

ஹே உமாபதே! த்ரிபுர ஸம்ஹார காலததில் மஹா விஷ்ணு உனக்கு பாணமாக ஆனுர். உலகங்களை எல்லாம் தாங்குகின்ற உன்னை ஏற்றி செல்லும் வாஹனமான விருஷபமாக ஆனுர். உன்னுடைய பாதி உடலை தன தாக்கிக் கொண்ட உமையும் விஷ்ணுவும் ஒரே அம்ச மாகையால் மஹாவிஷ்ணு உனது பத்னியாகவும் ஆனுர் என்று சொல்லப்படுகிறது. மேலும் உனது சரணுரவிந்த தர்சனத்திற்காகப் பன்றியாக ஆனுர் என்பதும், மோஹினி யாக அவதாரம் எடுத்து உனது தோழியாகவும் ஆனுர் என்பதும் ப்ரஸித்தமானதே. நீ ஆனந்த தாண்டவம் புரியும் வேளையில் ம்ருதங்கம் என்ற வாத்யத்தை வாசிக்

இன்ற பாக்யத்தை அவர் பெற்றுர். அதோடல்லாமல் ஆயிரம் தாமரை மலர்களால் உனது சரணுரவிந்தங்களை அர்ச்சிக்க விரும்பி ஆயிரம் பூர்த்தியாவதற்கு ஒன்று குறையவே தனது ஓர் கண்ணை தாமரைகண்ணனை மஹா விஷ்ணு உனக்கு அர்ப்பணம் செய்தார். உன்னுடைய சரீரத்தில் ஐக்யமாகி சங்கர நாராயணனுகவும் ஆனுர். இம்மாதிரி யாரும் பெறுவதற்கரிய பேற்றை பெற்ற காரணத்தால் ப்ரஹ்மா முதலிய தேவர்கள் எல்லோரையும் விட அந்த மஹாவிஷ்ணு உலகில் உயர்ந்தவர் அல்லாமல் அவரைவிடச் சிறந்தவர் உன்னைத் தவிர யார் தான் இருக்கிருர்கள்.

**जननमृतियुतानां सेवया देवतानां**
**न भवति सुखलेशस्संशयो नास्ति तत्र ।**
**अजनिममृतरूपं सांबमीशं भजन्ते**
**य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते ॥ ८३ ॥**

**ஜனன ம்ருதியுதானும் ஸேவயா தேவதானும்**
**ந பவதி ஸுகலேசஸ்ஸம்சயோ நாஸ்தி தத்ர ।**
**அஜனிமம்ருதருபம் ஸாம்பமீசம் பஜந்தே**
**ய இஹ பரமஸௌக்யம் தே ஹி தன்யா லபந்தே ॥ 83 ॥**

பிறப்பு இறப்பு இவ்விரண்டும் எல்லாத் தேவதைகளுக்கும் இருக்கிறது. அந்தத் தேவதைகளை ஸேவிப்பதால் சிறிதளவு சுகம்கூட அடைய முடியாது என்ற விஷயத்தில் சந்தேகமேயில்லை. அவர்களே துக்கத்தை அனுபவிக்கும்பொழுது மற்றவர்களுக்கு அவர்கள் சுகத்தை நிச்சயமாக அளிக்க முடியாது. பிறப்பும் இறப்பும் இல்லாதவனும் பராசக்தியுடன் ப்ரகாசிக்கின்றவனும் அளவில்லா ஆனந்தத்தை அள்ளி அள்ளி அளிக்

கின்றவனுமான ஸாம்பசிவனை இப்பிறவியிலேயே யார் பூஜை செய்கிருர்களோ அவர்கள் தான் பிறவி எடுத்த தின் பலனை அடைந்தவர்களாய் மோக்ஷம் என்ற மேலான சுகத்தை அடைகின்ருர்கள்.

शिव तव परिचर्यासन्निधानाय गौर्या
भव मम गुणधुर्यां बुद्धिकन्यां प्रदास्ये ।
सकलभुवनबन्धो सच्चिदानन्दसिन्धो
सदय हृदयगेहे सर्वदा संवस त्वम् ॥ ८४ ॥

சிவ தவ பரிசர்யா ஸந்நிதானய கௌர்யா
பவ மம குணதுர்யாம் புத்தி கன்யாம் ப்ரதாஸ்யே |
ஸகல புவன பந்தோ ஸச்சிதானந்த ஸிந்தோ
ஸதய ஹ்ருதய கேஹே ஸர்வதா ஸ்ம்வஸ த்வம் || 84 ||

உள்ளத்திற்கு ஆனந்தத்தையூட்டுகின்றவரே! அண்ட சராசரங்களையும் படைப்பவரே! உலகத்தில் வாழ்கின்ற ஜீவராசிகளின் பந்தோ! அளவில்லா ஆனந்தக்கடலே! கருணையே வடிவான ஹே ஸாம்பசிவ! பெண்ணுக்குரிய சிறந்த குணங்களையுடைய எனது புத்தியாகிய அழகிய கன்னியை சிறந்த பௌருஷ குணங்களையுடைய உனக்கு பணிவிடை செய்வதற்காக கன்னிகாதானமாக அளிக்கிறேன். பார்வதியுடன் ப்ரகாசிக்கின்ற நீ இக்கன்னியை ஏற்றுக்கொண்டு எனது ஹ்ருதயமாகிற அந்தப்புரத்தில் எப்பொழுதும் வஸித்துக் கொண்டேயிரு.

जलधिमथनदक्षो नैव पातालभेदी
न च वनमृगयायां नैव लुब्धः प्रवीणः ।

अशनकुसुमभूषावस्त्रमुख्यां सपर्यां
कथय कथमहं ते कल्पयानीन्दुमौले ॥ ८५ ॥

ஜலதிமதனதக்ஷோ நைவ பாதால-பேதீ
ந ச வனம்ருகயாயாம் நைவ லுப்த: ப்ரவீண:
அசன-குஸும-பூஷா-வஸ்த்ரமுக்யாம் ஸபர்யாம்
கதய கதமஹம் தே கல்பயானீந்துமௌளே || 85 ||

பூவை சூடுவது போல சிரஸில் பிறை சூடிய பெம்மானே! ஆஹாரம், புஷ்பம் ஆபரண அலங்காரம் வஸ்த்ரதாரணம் முதலியவைகளைச் செய்து உனது பூஜையை நான் எவ்விதம் செய்வேன். உனக்கு ஆஹாரமாக நிவேதனம் செய்ய வேண்டுமானாலும், புஷ்பத்தை ஸமர்பித்து பூஜை செய்யவும் நான் பாற்கடலைக் கடைவதில் வல்லமை பெற்றிருக்க வேண்டுமே. பாற்கடலிலிருந்து வந்த விஷத்தை நீ ஆஹாரமாக உண்டவனல்லவா. அங்கிருந்தே வந்த சந்திரனையும் புஷ்பமாக தலையில் தரித்தவனல்லவா. அதுபோல உனக்கு ஆபரணமாக போட நான் பாதாளத்தைப் பிளந்து ஸர்ப்பங்களைக் கண்டு பிடித்து அளிக்க வல்லமை பெற்றவனில்லை. நீயோவென்றால் ஸர்ப்பங்களையே ஆபரணமாக அணிகிறவனாக இருக்கிறாய். உனக்கு வஸ்த்ர தாரணம் செய்யவும் என்றால் முடியாது. நீ யானைத்தோலை உடுத்தியிருக்கிறாய். காட்டில் வேட்டையாடுவதில் திறமையுள்ள வேடனில்லை நான். ஆக உனது பூஜையை சரிவர நான் எவ்விதம் செய்யட்டும். சொல்.

पूजाद्रव्यसमृद्धयो विरचिताः पूजां कथं कुर्महे
पक्षित्वं न च वा किटित्वमपि नप्राप्तं मया दुर्लभम् ।

ज्ञाने मस्तकमंघ्रिपल्लवमुमाजाने न तेऽहं विभो
न ज्ञातं हि पितामहेन हरिणा तत्वेन तद्रूपिणा ॥ ८६।

பூஜாத்ரவ்ய-ஸம்ருத்தயோ விரசிதா: பூஜாம் கதம் குர்மஹே
பக்ஷித்வம் ந ச வா கிடித்வமபி ந ப்ராப்தம் மயா துர்லபம் |
ஜானே மஸ்தக மங்க்ரிபல்லவமுமா ஜானே ந தே/ஹம் விபோ
ந ஜ்ஞாதம் ஹி பிதாமஹேன ஹரிணு தத்வேன தத்ருபிணு ||

உமயை பத்னியாகச் செய்துகொண்ட ஹே உமாபதே! விதிப்படி உன்னை பூஜிப்பதற்குரிய பொருள்கள் எவை எவையோ அவைகளையெல்லாம் தேடிப் பிடித்து தயார் செய்தாகி விட்டன. ஆனுல் உனது பூஜையை எப்படி செய்வோம். உனது சிரஸ்ஸையும் பாதங்களையும் தான் பூஜை செய்ய வேண்டுமல்லவா? அவைகளை அறிய நான் ஹம்ஸப்பக்ஷியாகவோ அல்லது பன்றியாகவோ உருவம் மாறும் அரிய பேற்றைப் பெறவில்லையே! ஆகையால், எங்கும் நிரம்பியிருக்கின்ற ஹே பரம்பொருளே! ப்ரஹ்மா ஹம்ஸபக்ஷியாக ஆகியும் உன்னையோ உன் சிரஸ்ஸையோ அறிய முடியவில்லை. மஹா விஷ்ணு பன்றியாக ஆகியும் உன் பாதங்களைக் காண முடியவில்லை. அப்படி இருக்க நான் உனது சிரஸ்ஸையும் மென்மையான பாதங்களை யும் எவ்விதம் அறிந்து கொண்டு பூஜை செய்ய முடியும்?

अशनं गरलं फणी कलापो
वसनं चर्म च वाहनं महोक्षः ।
मम दास्यसि किं किमस्ति शंभो
तव पादांबुजभक्तिमेव देहि ॥ ८७ ॥

அசனம் கரலம் பணீ கலாபோ
வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ : |

மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி சம்போ
தவ பாதாம்புஜ பக்திமேவ தேஹி || 87 ||

ஸமஸ்த ஸுகங்களையும் அளிக்கும் ஹே சம்போ! நான் விரும்பி நீ அளிக்கக் கூடிய எப்பொருளுமே உன்னிடமில்லையே! பக்தர்களை காப்பதற்காக நீ ஆலகால விஷத்தை உண்டாய். அதாவது உனது ஆஹாரம் விஷம். அது எனக்குத் தேவையில்லை. எவருக்கு வேண்டுமானாலும் நீ அபயம் அளித்திடுவாய் என்பதை காட்டுவதற்காகவே ஸர்ப்பத்தை ஆபரணமாக அணிந்திருக்கிறாய். இதுவும் எனக்கு தேவையில்லை. நீ பற்றற்றவன் என்பதைக் காட்டுவதற்காகவே யானைத் தோலை ஆடையாக உடுத்தியிருக்கிறாய். இதுவும் எனக்குத் தேவையில்லை. நீ ஏறும் வாஹனமோ கிழட்டுக்காளை. இவைகளில் எனக்கு வேண்டியது எது. எதை நீ எனக்கு அளிக்க போகிறாய். எதுவுமேயில்லை; ஆகையால் உனது சரணாரவிந்த பக்தியை எனக்கு அளித்திடு.

यदा कृतांभोनिधिसेतुबन्धनः
करस्थलाधःकृतपर्वताधिपः ।
भवानि ते लंघितपद्मसंभवः
तदा शिवार्चास्तवभावनक्षमः ॥ ८८ ॥

யதா க்ருதாம்போநிதி-ஸேதுபந்தன:
கரஸ்த்தலாத: க்ருத பர்வதாதிப: |
பவானி தே லங்கித-பத்ம ஸம்பவ:
ததா சிவார்ச்சா-ஸ்த்வ பாவன க்ஷம: || 88 ||

ஹே சிவ! உன்னை த்யானம் செய்வதில் ப்ரஸித்தி பெற்றவர் மஹாவிஷ்ணுவே. அவர் ப்ரஹ்மாவை விடச்

சிறந்தவர். ராமராக அவதாரம் செய்து ஸமுத்திரத்தில் அணைகட்டியவர். அப்படிப்பட்ட விஷ்ணுவைப் போலவும் உன்னை ஸ்தோத்திரம் செய்வதில் மிக ஸமர்த்தரான வரும் தன்கையினால் விந்திய மலையை தரையோடு தரை யாகச் செய்தவருமான அகத்திய முனிவரைப் போலவும், உன்னை அர்ச்சிப்பதில் ப்ரஸித்தரான ப்ரஹ்மதேவனைப் போலவும் நான் எப்பொழுது ஆவேனோ அப்பொழுது உன்னை த்யானிப்பதிலும், ஸ்தோத்திரம் செய்வதிலும், அர்சிப்பதிலும் தகுதியுள்ளவனாக ஆவேன்.

नतिभिर्नुतिभिस्त्वमीश पूजा-
विधिभिर्ध्यानसमाधिभिर्न तुष्टः ।
धनुषा मुसलेन चाश्मभिर्वा
वद ते प्रीतिकरं तथा करोमि ॥ ८९ ॥

நதிபிர்-நுதிபிஸ் த்வமீச பூஜா-
விதிபிர்த்யான ஸமாதிபிர் ந துஷ்ட: ।
தனுஷா முஸலேன சாச்மபிர் வா
வத தே ப்ரீதிகரம் ததா கரோமி ॥ 89 ॥

ஹே ஜகதீச! ஓர் சிவபக்தை உன்னை உலக்கையால் (அடித்து) ஸந்தோஷமுறச் செய்தாள். அது போல பக்தன் ஒருவன் கற்களால் (அடித்து) உனக்கு ப்ரியத்தை யூட்டினான். அர்ஜுனன் தனது காண்டீபத்தால் உன்னை உதைத்தான். அவ்வுதையால் ஸந்தோஷமடைந்து நீ காட்சி அளித்தாய் என்பவை யாவும் புராண ப்ரஸித்தமான கதைகள். இவர்கள் செய்த உபசாரங்களினால் த்ருப்தி யடைந்தது போல நீ எனது நமஸ்காரங்களாலும், ஸ்தோத்திரங்களாலும், த்யானம் ஸமாதி இவைகளா லும் த்ருப்தியடையவில்லை. உனக்கு மிகவும் ப்ரியமானவை எவை என்பதைச் சொல். அப்படியே நான் செய்கிறேன்.

वचसा चरितं वदामि शंभो-
रहमुद्योगविधासु तेऽप्रसक्तः ।
मनसाकृतिमीश्वरस्य सेवे
शिरसा चैव सदाशिव नमामि ॥ ९० ॥

**வசஸா சரிதம் வதாமி சம்போ-**
**ரஹமுத்யோக விதாஸு தே/ப்ரஸக்த: |**
**மனஸாக்ருதி-மீச்வரஸ்ய ஸேவே**
**சிரஸா சைவ ஸதாசிவம் நமாமி || 90 ||**

ஹே ஸதாசிவ! மனதை ஒருமுகப்படுத்தி நிலைநிறுத்தி உனக்கு ஸமர்ப்பணம் செய்யும் யோக முறைகளில் நான் பயிற்சி பெற்றவனில்லை. ஆகையினால் எனது வாக்கால் உனது திவ்ய சரித்திரங்களைச்சொல்லுகிறேன். எனது மனதால் உனது திவ்யமங்கள உருவத்தை நினைக்கிறேன். எனது தலையால் உனது மங்கள உருவத்தை வணங்குகிறேன். இவ்விதம் த்ரிகரணங்களாலும் உன்னை ஸேவிக்கிறேன்.

आद्याऽविद्या हृद्गता निर्गतासी-
द्विद्या हृद्या हृद्गता त्वत्प्रसादात् ।
सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं
भावे मुक्तेर्भाजनं राजमौले ॥ ९१ ॥

**ஆத்யா/வித்யா ஹ்ருத்கதா நிர்க்கதாஸீத்-**
**வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத்ப்ரஸாதாத் ।**
**ஸேவே நித்யம் ஸ்ரீகரம் த்வத்பதாப்ஜம்**
**பாவே முக்தேர்பாஜனம் ராஜமௌளே || 91 ||**

ஹே சந்த்ரசேகர! அனாதிகாலமாக என் இதயத்தில் புகுந்திருந்த அஜ்ஞானமானது உனது அனுக்ரஹத்தால் வெளியேறிவிட்டது. அறியாமையானது அழிந்தே போயிற்று. இதய முடிச்சை அவிழ்க்கின்ற அந்த பேரறிவின் விளக்கம் உதித்துவிட்டது. ஆகையால் ஸகல ஐச்வரியங்களையும் நல்குகின்றதும் மோக்ஷத்திற்கு ஆதாரமானதுமான தாமரை மலர் போன்ற உனது பாதங்களை எனது மனத்தில் த்யானம் செய்கிறேன்.

दूरीकृतानि दुरितानि दुरक्षराणि
दौर्भाग्यदुःखदुरहंकृतिदुर्वचांसि ।
सारं त्वदीयचरितं नितरां पिबन्तं
गौरीश मामिह समुद्धर सत्कटाक्षैः ॥ ९२ ॥

**தூரீக்ருதானி துரிதானி துரக்ஷராணி**
**தௌர்ப்பாக்ய-து:க்க-துரஹங்க்ருதி துர்வசாம்ஸி**
**ஸாரம் த்வதீயசரிதம் நிதராம் பிபந்தம்**
**கௌரீச மாமிஹ ஸமுத்தர ஸத்கடாக்ஷை: || 92 ||**

ஹே பார்வதீரமண! ப்ரஹ்மதேவனால் தலையில் எழுதப்பட்ட மட்டமான அக்ஷரங்களாலும் பாபங்களாலும் உண்டாகின்ற, துரதிர்ஷடம், மஹாதுக்கம், துரஹங்காரம், சொல்லக்கூடாத வார்த்தைகள் இவைகள் யாவும் உனது கடைக்கண் பார்வையால் என்னை விட்டு விலக்கப்பட்டு விட்டன. மற்ற தைவங்களின் சரித்திரத்தை விட ஸத்தான உனது சரித்திரத்தை மிகவும் விருப்பிக் காதால் கேட்கின்ற என்னை இப்பிறவியிலேயே பிறப்பு இறப்பற்றவனாகச் செய்து கரையேற்றி விடு.

सोमकलाधरमौलौ
कोमलघनकन्धरे महामहसि ।

स्वामिनि गिरिजानाथे
मामकहृदयं निरन्तरं रमताम् ॥ ९३ ॥

ஸோமள-கலாதர-மௌளௌ
கோமள-கனகந்தரே மஹாமஹஸி |
ஸ்வாமினி கிரிஜாநாதே
மாமக-ஹ்ருதயம் நிரந்தரம் ரமதாம் || 93 ||

அழகான பிறை மதியை ஜடாமுடியில் சூடியவனும், மனோஹரமான நீருண்டமேகம் போன்ற கழுத்தை யுடையவனும், எல்லாவற்றையும் தனது அதீனமாகக் கொண்டவனும், மலைமகளுக்குப் பதியுமான அந்த ஒப்பற்ற பேரொளிப் பிழம்பான பரப்ரஹ்மத்தில் லயித்து எனது மனம் எப்பொழுதும் இன்புற்றிருக்கட்டும்.

सा रसना ते नयने तावेव करौ स एव कृतकृत्यः ।
या ये यौ यो भर्गं वदतीक्षेते सदार्चतः स्मरति ॥ ९४ ॥

ஸா ரஸனு தே நயனே தாவேவ கரௌ ஸ ஏவ க்ருத-க்ருத்ய:
யா யே யௌ யோ பர்க்கம் வததீக்ஷேதே ஸதார்ச்சத: ஸ்மரதி ||

எவனுடைய நா எப்பொழுதும் ஓம் சிவாய நம: என உச்சரிக்கின்றதோ அதுவே நா. மற்றது நாவல்ல எவனது இரு கண்கள் பரமேச்வரனை ஸதா பார்க்கின்றதோ அவையே கண்கள். மற்றவை கண்கள் அல்ல. எவனுடைய இருகரங்களும் எப்பொழுதும் பரமேச்வரனை பூஜிக்கின்றதோ அவையே கைகள், மற்றவை கைகள் அல்ல. எந்த பக்தன் பரமேச்வரனையே எப்பொழுதும் நினைக்கிருனே அவனே தன்யன். மிகுந்த பாக்யவான்.

अतिमृदुलौ मम चरणावतिकठिनं ते मनो भवानीश ।
इति विचिकित्सां सन्त्यज कथमासीद्गिरौ तथा प्रवेशः ॥

அதிம்ருதுலௌ மம சரணௌ-வதிகடினம் தே மனோ பவானீச ।
இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ கதமாஸீத்கிரௌ ததா ப்ரவேச: ||

பார்வதீபதியான ஹே பரமேச்வர! என்னுடைய கால்கள் இரண்டும் மிகவும் மென்மையானவை. உனது மனம் பாறை போல் மிக மிகக் கடினமானது என்ற ஸந்தேஹம் உனக்கு இருக்குமேயானுல் அந்த ஸந்தேஹத்தை விட்டு விடு. ஏனெனில் எனது மனதைப் போலவே மிகக் கடினமான மலையில் உனது மென்மையான கால்களை வைத்து இங்குமங்கும் பார்வதீ ஸமேதனுக நீ எவ்விதம் சுற்றித்திரிந்தாய். ஆகையால் கவலையின்றி எனது மனதிலேயே தங்கியிரு.

धैर्याङ्कुशेन निभृतं
रभसादाकृष्य भक्तिशृंखलया ।
पुरहर चरणालाने
हृदयमदेभं बधान चिद्यन्त्रैः ॥ ९६ ॥

தைர்யாங்குசேன நிப்ருதம்
ரபஸாதாக்ருஷ்ய பக்தி-ச்ருங்கலயா |
புரஹர சரணலானே
ஹ்ருதயமதேபம் பதான சித்யந்த்ரை: || 96 ||

முப்புரங்களை எரித்த ஏ பரமேச்வர! எனது மனம் ஒரு மதம் பிடித்த யானையே. இங்குமங்கும் சுற்றுகின்ற அந்த யானையைத் தைரியம் என்ற அங்குசத்தால் வேகமாக இழுத்து, பக்தி என்ற சங்கிலியைக் கொண்டு "உனது சரணமாகிய கட்டுத்தறியில் பரப்ரஹ்மஜ்ஞானமென்ற யந்திரங்களால் அசைவில்லாமல் திடமாக இருக்கும்படி கட்டிவிடு.

प्रचरत्यभितः प्रगल्भवृत्त्या
मदवानेष मनःकरी गरीयान् ।
परिगृह्य नयेन भक्तिरज्ज्वा
परम स्थाणु पदं दृढं नयामुम् ॥ ९७ ॥

ப்ரசரத்யபித: ப்ரகல்ப-வ்ருத்யா
மதவானேஷ மன:கரீ கரீயான் ।
பரிக்ருஹ்ய நயேன பக்திரஜ்வா
பரம ஸ்த்தாணுபதம் த்ருடம் நயாமும் ॥ 97 ॥

மனதிற்கு சாச்வதமான சாந்தியளிக்கின்ற ஹே பரமனே! எனது மனம் மதம் பிடித்ததும் மிக்க பலம் உடையதுமான ஒரு யானையே. இது கம்பீரமான சேஷ்டைகளுடன் நாலாபக்கங்களிலும் சுற்றுகிறது. இவ்விதம் சுற்றித்திரிகின்ற எனது மனம் என்ற மத்த கஜத்தை பக்தி என்ற கயிறால் கட்டி நல்ல முறையில் அமைதி பெறச் செய்து உனது வசமாக அடிபணியுமாறு செய்துவிடு. எந்த இடத்திற்குச்சென்றால் திரும்பவும் வரவேண்டியதில்லையோ அந்த நிர்குண ப்ரஹ்ம பதவியை அடையச் செய்.

सर्वालङ्कारयुक्तां सरलपदयुतां साधुवृत्तां सुवर्णां
सद्भिस्संस्तूयमानां सरसगुणयुतां लक्षितां लक्षणाढ्याम् ।
उद्यद्भूषाविशेषामुपगतविनयां द्योतमानार्थरेखां
कल्याणीं देव गौरीप्रिय मम कविताकन्यकां त्वं गृहाण ॥

ஸர்வாலங்காரயுக்தாம் ஸரலபதயுதாம்
ஸாதுவ்ருத்தாம் ஸுவர்ணும்
ஸத்பிஸ்ஸம்ஸ்தூயமானும் ஸரஸகுணயுதாம்
லக்ஷிதாம் லக்ஷணுட்யாம் ।

**உத்யத் பூஷா விசேஷாமுபகத-விநயாம்**
**த்யோதமானூர்த்தரேகாம்**
**கல்யாணீம் தேவ கௌரீப்ரிய மம கவிதா-**
**கன்யகாம் த்வம் க்ருஹாண || 98 ||**

[இந்த ச்லோகத்தில் இருபொருள் கொண்ட பல சொற்களால் இந்த ஸ்தோத்ரகாவியத்தை ஒரு கன்னியாகவே கொண்டு ஸ்ரீ பரமேச்வரனுக்கு ஸமர்ப்பணம் செய்கிருர் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் அவர்கள்]

பார்வதியை பத்னியாக பெற்ற ஹே தேவதேவ! ஒரு கன்னிகைக்கு எத்தனை லக்ஷணங்கள் உள்ளனவோ அத்தனையும் இந்த சிவானந்தலஹரீ என்ற கன்னிகைக்கு இருக்கிறது. கன்னி எல்லா ஆபரணங்களையும் அணிந்திருக்கிருள் என்ருல் இக்காவியமாகிய கன்னிகை உவமை முதலிய அணி அலங்காரங்களையுடைவளாக இருக்கிருள். மேலும் ஒரு கன்னிகையானவள் மிக மெதுவாக அன்ன நடையுடையவளாகவும், நல்ல பழக்கவழக்கங்களையுடையவளாகவும், வசீகரமான நிறம் கொண்டவளாகவும், பெரியோர்களால் கொண்டாடப் படுகின்றவளாகவும், நல்ல நல்ல உயர்ந்த குணங்களையுடையவளாகவும், குறிப்பிட்டுச் சொல்லும்படியான சிறப்புக்களையுடையவளாகவும், உத்தமலக்ஷணங்களையுடையவளாகவும், ப்ரகாசமுள்ள ஆடையாபரணங்களையணிந்தவளாகவும் அடக்கமாக இருக்கின்றவளும், தனரேகை முதலிய ஸாமுத்ரிகா ரேகைகளையுடையவளாகவும், இருக்கின்ற ஸர்வமங்கள ஸ்வரூபியான ஒரு கன்னியைப்போலவே எனது இக்காவியத்திலும் உவமை முதலிய அலங்காரங்களுடன் எளிய சொற்களையுடையதும் உத்தமமான "வஸந்த திலகா" ஆர்யா முதலிய விருத்த (பண்)ங்களோடும் நல்ல நல்ல எழுத்துக்களுடனும், மெத்தப்படித்த வித்வான்களால் பெரிதும் புகழப்படுகின்றதும், பக்தி, ச்ருங்காரம்,

மாதுர்யம் முதலிய குணங்களுடனும், குறிக்கோள் எதுவோ அதையுடையதும், காவியத்திற்கான லக்ஷணங்கள் நிறைந்ததும், இனிய சொற்களை வைத்து இயற்றப்பட்டதும், கவிதா நயத்தையுடையதும், ஆழ்ந்த பொருள் நிறைந்ததும், படிப்பவர்களுக்கு நன்மையைச் செய்கின்றதுமான இக்காவியமாகிய கன்னிகையை உனக்கு ஸமர்ப்பிக்கிறேன். ஏற்றுக்கொள்.

इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे
गतौ तिर्यग्रूपं तव पदशिरोदर्शनधिया ।
हरिब्रह्माणौ तौ दिवि भुवि चरन्तौ श्रमयुतौ
कथं शंभो स्वामिन् कथय मम वेद्योसि पुरतः ॥ ९९ ॥

இதம் தே யுக்தம் வா பரமசிவ காருண்யஜலதே
கதௌ திர்யக்ரூபம் தவ பதசிரோ-தர்சனதியா ।
ஹரிப்ரஹ்மாணௌ தௌ திவி புவி சரந்தௌ ச்ரமயுதௌ
கதம் சம்போ ஸ்வாமின் கதய மம வேத்யோஸி புரத: ॥

ப்ரஹ்மதேவனுக்கும் மஹாவிஷ்ணுவிற்கும் காட்சியளிக்காத ஹே பரமேச்வர! கருணைக்கடலே! உனது பாதத்தைக் காணவேண்டுமென்று விஷ்ணுவும் தலையை காண வேண்டுமென்று ப்ரஹ்மனும் முறையே பன்றியாகவும் ஹம்ஸமாகவும் உருக்கொண்டு ஆகாயத்திலும் பூமியிலும் சுற்றி சுற்றிக் களைத்து போய் விட்டார்களேயன்றி நீ அவர்கள் முன் காட்சியளிக்கவில்லை. அப்படிப்பட்ட ஹே சம்போ! என் முன் தோன்றி எனக்கு மட்டும் தர்சனம் அளித்தாயே. நீ இவ்விதம் செய்தது முறையா! பக்தனிடம் உனக்கிருக்கும் கருணையே கருணை.

स्तोत्रेणालमहं प्रवच्मि न मृषा देवा विरिंचादयः
स्तुत्यानां गणनाप्रसंगसमये त्वामग्रगण्यं विदुः ।

माहात्म्याग्रविचारणप्रकरणे धानातुषस्तोमवत्
धूतास्त्वां विदुरुत्तमोत्तमफलं शम्भो भवत्सेवकाः ॥१००॥

ஸ்தோத்ரேணாலமஹம் ப்ரவச்மி ந ம்ருஷா தேவா விரிஞ்சாதய:
ஸ்துத்யானாம் கணனாப்ரஸங்க-ஸமயே த்வாமக்ரகண்யம் விது
மாஹாத்ம்யாக்ர-விசாரண ப்ரகரணே தானாதுஷஸ்தோமவத் -
தூதாஸ்த்வாம் விதுருத்தமோத்தம-பலம் சம்போ பவத்-
ஸேவகா: || 100 ||

ஹே சம்போ! உனது பக்தர்களாகிய ப்ரஹ்மா முதலியவர்களும் மற்ற தேவர்களும் யாரை ஸ்தோத்ரம் செய்ய வேண்டுமென்று சர்ச்சை எழுந்த காலத்தில் ஸ்துதிக்கப்பட வேண்டியவர்களுள் முழு முதல் கடவுளாகவும் முதலாமவனாகவும் நீ தான் என அறிந்து கொண்டு முடிவு செய்திருக்கிறார்கள். மஹிமையைக் குறித்து சர்ச்சை ஏற்பட்ட காலத்தில் மற்ற தைவங்களின் மஹிமை உனது மஹிமையோடு ஒப்பிட்டு பார்த்ததில் உனது மஹிமையே சிறந்தது எனவும் தீர்மானித்திருக்கிறார்கள். நெல் முதலிய தான்யங்களை அரைத்து உமியை விலக்குவது போலவே தான் மற்ற தேவதைகளுடைய மஹிமை எனவும் தீர்மானித திருக்கிறார்கள். நான் உன்னைத் துதித்தது போதும். ஸ்தோத்ரம் என்றால் இல்லாதவைகளையும் இருப்பதாக கூறுவதுண்டு. நான் அப்படி ஸ்துதிக்கவில்லை. நான் சொன்னது யாவும் உண்மையே.

इति श्रीमत्परमहंस परिव्राजकाचार्य श्रीमच्छंकराचार्य विरचिता
शिवानन्दलहरी समाप्ता ॥

———

Printed at Ramayana Printing Works, Madras-4.